# ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்-ராமேஸ்வரம்

1981ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 12ஆம் தேதி இம்மடாலயம் துவக்கப் பெற்றது. அன்று முதல் இங்கு மஹேஸ்வர பூஜை முறையில் அன்னம் வழங்குதல் நடைபெற்று வருகிறது. இதில் யாத்திரிகர்களும் உள்ளூர் பள்ளி மாணவர்கள் சிலரும் கலந்து கொள்கின்றனர். இந்த மடாலயத்தின் தணிக்கை செய்யப்பட்ட 82–83ஆம் ஆண்டின் வரவு செலவுக் கணக்கும், கையிருப்புச் சீட்டும் கீழே தரப்பட்டுள்ளன. இம்மடாலயத்தைப் புதுப்பிக்கும் வேலே நடைபெற்று வருகிறது.

## 1—4—82 முதல் 31—3—83 முடிய உள்ள ஆண்டின்
## வரவு செலவுக் கணக்கு

| | ரூ. பை. | ரூ. பை. |
|---|---|---|
| நன்கொடை | 9 594-00 | |
| உண்டியல் வசூல் | 1 689-85 | |
| நிதிவருவாய் | 9 043-80 | |
| தஸ்திக் அலவன்ஸ் | 23 176-50 | |
| விளைபொருள்கள் | 3 313-19 | |
| ஆச்ரம நிர்வாகச் செலவு | | 14 874-60 |
| உணவுச் செலவு | | 58 904-87 |
| விவசாயச் செலவு | | 280-75 |
| தேவிப்பட்டணம்&திருப்புல்லாணி சத்திரச் செலவு | | 1 573-60 |
| அதிகச் செலவைத் தபோவனம் ஈடு செய்தது | 28 816-48 | |
| | 75 633-82 | 75 633-82 |

## 31—3—83 முடிய கை இருப்புச் சீட்டு

| | மூலதனமும் ருணமும் ரூ. பை. | சொத்தும் ஆஸ்தியும் ரூ. பை. |
|---|---|---|
| ஸ்டேட் பேங்கு | 8 498-53 | |
| தபோவனம் | 3 02 359-74 | |
| அன்னதான நிதி | 1 11 934-00 | |
| கட்டடம் | | 3 93 313-96 |
| மெஷினரி, தளவாடம், பாத்திரங்கள் | | 21 319-77 |
| E.B. Deposit | | 808-00 |
| நபர்கள் பற்று | | 587-10 |
| புத்தகங்கள் | | 321-64 |
| இருப்பு ரொக்கம் | | 6 441-80 |
| | 4 22 792-27 | 4 22 792-27 |

இவ்வாண்டு முழுவதும் யாத்திரிகர்கள், ஆச்ரமவாசிகள், மாணவர்கள் ஆகியோர் உணவு ஏற்றது காலே 4 441 பேர், பகல் 7 125 பேர், இரவு 5 055 பேர் ஆகும்.

# தர்ம சக்கரம்

மாத சஞ்சிகை

| சக்கரம் 32 | ருத்ரோத்காரி ஹூ ஆடி மீ | ஆரம் 7 |
|---|---|---|

## பொருளடக்கம்



உள்நாடு தனி இதழ் ரூ. 1-50 வெளிநாடு தனி இதழ் ரூ. 3-00

**உள்நாடு வருட சந்தா: ரூ. 15-00 வெளிநாடு வருட சந்தா: ரூ. 35-00**

## அந்தர்யோக விவரங்கள்

**இராமநாதபுரம் ஜில்லா—பள்ளத்தூரில் 17—7—83 ஞாயிற்றுக்கிழமை**

இடம்: ஸ்ரீ சாரதா சேவாஸ்ரமம்

நேரம்: காலே 10-00 மணிமுதல் மாலே 4-30 மணிவரை

நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி துருவானந்தர்

உணவு வசதி: பகல் உணவிற்கு ரூ. 1-50 செலுத்திச் சீட்டுப்பெற்றுக்கொள்ளலாம்.

**மதுரை ஜில்லா—தேனியில் 20—7—83 புதன்கிழமை**

இடம்: ஸ்ரீ கணேச கந்தப்பெருமாள் ஆலயம், தியாகராஜ நகர்

நேரம்: காலே 10-00 மணிமுதல் மாலே 4-30 மணிவரை

நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி துருவானந்தர்

உணவு வசதி: பகல் உணவிற்கு ரூ. 1-50 செலுத்திச் சீட்டுப்பெற்றுக்கொள்ளலாம்.

**கோவை ஜில்லா—செங்குட்டைப்பாளேயத்தில் 27—7—83 புதன்**

இடம்: சுவாமி சித்பவானந்த கிராம சேவா சங்கம்

நேரம்: காலே 10-00 மணிமுதல் மாலே 4-30 மணிவரை

நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

[தொடர்ச்சி பின் பக்கம் பார்க்க]

அந்தர்யோக விவரங்கள் (தொடர்ச்சி)

**திருநெல்வேலி ஜில்லா—ஸ்ரீவைகுண்டத்தில் 31—7—83 ஞாயிறு**

இடம்: வடக்கு மாடவீதி, விஸ்வஹிந்து பரிஷத்தின் ஹிந்து வித்யாலயாவில்
நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி திவ்யானந்தர்

**சேலத்தில் 7—8—83 ஞாயிற்றுக்கிழமை**

இடம்: ஸ்ரீ சாரதா கல்லூரியின் பிரார்த்தனைக் கொட்டகை
நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்

**திருநெல்வேலி ஜில்லா—தூத்துக்குடியில் 7—8—83 ஞாயிற்றுக்கிழமை**

இடம்: சிவன் கோவில் தெருவிலுள்ள சச்சிதானந்த சபை
நேரம்: காலை 10 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி அசலானந்தர்

**கோவை ஜில்லா—அன்னூரில் 14—8—83 ஞாயிற்றுக்கிழமை**

இடம்: ஸ்ரீ ராமகிருஷ்ண ஆச்ரமம்
நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி அசலானந்தர்

---

*திருநெல்வேலி ஜில்லா*

## பாபநாசத்தில் அந்தர்யோகம் - 20

***29, 30 & 31—7—83***

அந்தர்யோகத்தில் கலந்துகொண்டு இடவசதி, உணவு வசதி வேண்டும் அன்பர்களும், தாய்மார்களும் நபர் ஒன்றுக்கு ரூபாய் முப்பது வீதம் திருநெல்வேலி ஜில்லா, அம்பாசமுத்திரம் நூல், ஜவுளி வியாபாரம் திரு. SV.RM.A. நடராஜ முதலியார் அவர்களுக்கு மணியார்டர் மூலமோ, நேரிலோ செலுத்திப் பெயர்களைப் பதிவு செய்து அனுமதிக்கார்டு பெற்றுக் கொள்ளவேண்டும். கலந்துகொள்ள இயலாதவர்களுக்குத் தொகை வாபஸ் செய்ய இயலாது. பதிவுசெய்யப் பெற்றவர்களுக்குப் பதிலாக வேறு ஒருவர் எடுத்துக்கொள்ளப்படமாட்டார். பதிவு செய்துகொண்டவர்கள் அனைவரும் ஜூலை மாதம் 28ஆம் தேதி வியாழக்கிழமை மாலை 6 மணிக்குள் பாபநாசத்திற்கு வந்துசேர வேண்டும். தங்கள் சௌகரியத்துக்குத் தேவையான படுக்கை முதலியவற்றைத் தாங்களே கொண்டுவரவேண்டும். இடவசதி, உணவு வசதி தேவை இல்லாதவர்கள் பணம் கட்டாமலேயே அந்தர்யோக நிகழ்ச்சிகளில் கலந்துகொண்டு பயன்பெறலாம்.

பன்னிரண்டு வயதிற்குக் கீழ்ப்பட்ட சிறுவர்களும், கைக்குழந்தைகளுடன் வரும் தாய்மார்களும், நடைமுறையைப் பின்பற்ற இயலாதவர்களும் இதில் சேர்த்துக்கொள்ளப்படமாட்டார்கள்.

வாழ்க்கை முறையை ஆனி மாதத் தர்மசக்கரம் அட்டை இரண்டாம் பக்கத்தைப் பார்த்துத் தெரிந்துகொள்ளவும்.

காரியதரிசி
SV. RM. A. நடராஜ முதலியார், அம்பாசமுத்திரம்

ஸதானந்த
ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்



प्रज्ञानं ब्रह्म

# தர்ம சக்கரம்

அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க்(கு) அல்லால்
பிறவாழி நீந்தல் அரிது.


| சக்கரம் 32 | ருத்ரோத்காரி ௵ ஆடி ஶ்ரீ | ஆரம் 7 |
|---|---|---|


## பிரார்த்தனை

न मे रागादिको दोषो दुःखं देहादिकं न मे ।
आत्मानं विद्धि मामेकं विशालगगनोपमम् ॥

— अवधूतगीता

*ந மே ராகாதிகோ தோஷோ துக்கம் தேஹாதிகம் ந மே ।*
*ஆத்மானம் வித்தி மாமேகம் விசாலககனோபமம் ॥*

*— அவதூத கீதை*

ஆகாசத்தைப் போன்று நான் வியக்தியற்றவன். ஆதலால் பற்றுதல் போன்ற குறை நிலை எனக்கில்லை; துக்கமும் எனக்கில்லை.

பொறுத்தேன் புன்சொல் நெஞ்சில் பொருள்இன்பம் என இரண்டும்
இறுத்தேன் ஐம்புலன்கட் சடன்ஆயின வாயிலொட்டி
அறுத்தேன் ஆர்வச்செற்றம் அவைதம்மை மனத்(து)அகற்றி
வெறுத்தேன் நின்அடைந்தேன் திருவிண்ணகர் மேயவனே.

*— திருமங்கையாழ்வார்*

# அருள் விருந்து

தேசஅபிமானத்திலும் மிக்கது தெய்வ பக்தி.

நகர வாழ்வினும் மிக்கது நாட்டுப்புற வாழ்வு.

அறநெறி பிறழாதிருப்பவன் அரசனுக்கும் மிக்கான் ஆகிறான்.

இறைவனின் மகிமை மண்ணுலகில் மேலோர் மூலம் மிளிர்கிறது.

வைகறையில் நீராடு. மனத்தெளிவை அது உண்டுபண்ணுகிறது.

சுயநலப்பற்றே துயரங்கள் அனைத்துக்கும் அடிப்படைக் காரணமாகும்.

அபிப்பிராய வேற்றுமைக்கிடையில் அனுஷ்டிக்கும் நட்பே சிறந்ததாம்.

பரம்பொருளைச் சார்ந்திருப்பவனுக்கு வாழ்வில் விக்கினம் ஏதும் இல்லை.

பிறர் பணிவிடையில் தன்னை மறந்திருப்பவன் ஆத்மபரிபாகமடைகிறான்.

பண்பிலே பழைய முறையை ஆழ்ந்து பற்றிப் பிடி. அதற்கிடையில் நடைமுறையில் நவீனத்தைத் தழுவு.

சுயநலப்பற்று மனதை மாசுபடுத்துகிறது. அது வந்து தாக்காத வண்ணம் யாண்டும் எச்சரிக்கையாயிரு.

மனம்போன போக்கில் போகிறவன் பாமரன்; மனதை நல்வழியில் நடாத்துபவன் பண்பட்டவன்.

மரணம் மக்கள் எல்லாருக்கும் பொதுவானது. மற்று வாழ்க்கை முறையோ தரத்துக்கேற்றபடி மாறியமைகிறது.

தாயினிடத்து நம்பிக்கை வைத்துக் குழந்தை கவலையற்றிருக்கிறது. தெய்வத்தை நம்பிப் பக்தன் கவலைப்படாதிருக்கிறான்.

உலகப்பற்றுடையவனுக்கு வனத்தின் மகிமை விளங்குவதில்லை. பற்றற்றவனுக்கோ வனம் தெய்விகம் ததும்புவதாகக் காட்சி தருகிறது.

பிரதிபலனை எதிர்பார்ப்பவன் தொண்டனாகான். நல்ல தொண்டன் சமுதாயத்தின் தாக்குதலைப் பொருட்படுத்துவதில்லை. அன்பினால் தூண்டப்பெற்று அவன் பணிவிடை புரிகிறான்.



## பரமஹம்சர் புகட்டிய

# பெருநெறி விளக்கம்

பரமஹம்சதேவர்: "நான் கற்பித்துக் கொடுத்த பிரகாரம் நீ சாதனங்கள் செய்து கொண்டிருக்கிருயா?"

பூரணன்: "ஆம் ஐயனே, செய்து கொண்டிருக்கிறேன்."

பரமஹம்சதேவர்: "நீ கனவு காண்கின்ருயா? கனவிலே உனக்குச் சுடர் ஒளி தென்படுகின்றதா? தீவட்டி-ஒன்றைக் காண்கின்ருயா? ஏதேனும் சுமங்கலியின் காட்சி உனக்குத் தென்படுகின்றதா? ஸ்மசானம் உனக்குக் கனவில் தென்படுகின்றதா? இவைகளைக் குறித்துக் கனவு காண்பது நல்ல அறிகுறிகளாகும்."

பூரணன்: "ஐயனே, என் கனவில் தாங்கள் தென்பட்டீர்கள். அமர்ந்திருந்த வண்ணம் தாங்கள் எனக்கு ஏதோ உபதேசம் செய்து கொண்டிருந்தீர்கள்."

பரமஹம்சதேவர்: "உபதேசமா? எதைக் குறித்து என்று ஞாபகத்தில் இருப்பதை எடுத்து இயம்பு."

பூரணன்: "அது ஒன்றும் என் ஞாபகத்தில் இப்பொழுது இல்லை."

பரமஹம்சதேவர்: "அதைக் குறித்துக் கவலைப்படவேண்டாம். நீ இங்கு வந்தால் முன்னேற்றமடைவாய். என்னைக் காண்பதில் நீ திருப்தி அடைகின்ருய் இல்லையா?" சிறிது நேரத்திற்குப் பிறகு பரமஹம்சதேவர் அவ் விளைஞனிடம், "நீ தக்ஷிணேசுவர ஆலயத்துக்கு வர மாட்டாயா?" என்று கேட்டார். அதற்கு விடையாக அவன், "நான் அதைக் குறித்து உறுதிகூறும் நிலையில் இல்லை" என்று இயம்பினன்.

பரமஹம்சதேவர்: "ஏன் அங்கு இருப்பதற்கு என்ன தடை? உன்னுடைய உறவினர் ஒருவர் ஆங்கு வசித்து வருகிருர் அல்லவா?"

பூரணன்: "ஆம், ஐயனே. ஆனல் அங்குச் செல்வதற்கு எனக்கு வசதி ஏதும் இல்லை."

பிரம்ம சமாஜத்தைச் சேர்ந்துள்ள திரைலோக்கியர் இயற்றிய கேசவசந்திர சேனருடைய வரலாற்றைக் கிரீஷ்சந்திரகோசர் அப்பொழுது படித்துக்கொண்டிருந்தார். அதில் இயம்பப்பெற்றுள்ள ஒரு விஷயம் பரமஹம்ச தேவருடைய சிஷ்யர்களின் கவனத்தைக் கவர்ந்தது. அதாவது இவ்வுலக வாழ்வைப் பற்றிச் சிறிதளவும் அக்கறையற்றவராகவும் உதாசீனராகவும் பரமஹம்சதேவர் முதலில் இருந்தார். ஆனல் கேசவசந்திரசேனரைச் சந்தித்து அவரோடு உறவாடிய பிறகு பரமஹம்சதேவர் தம் கருத்தை மாற்றிக்கொண்டார். அதாவது ஆத்ம சாதகன் ஒருவன் இவ்வுலகைப் புறக்கணிக்க வேண்டிய அவசியமில்லை. இவ்வுலகில் அவன் நன்கு வாழ்ந்திருக்கலாம். இவ்வுலகுக்கு அவன் நன்கு பணிவிடையும் பண்ணலாம். அதற்கிடையில் ஆத்ம சாதனத்தில் முன்னேற்றம் அடைவதும் அவனுக்குச் சாத்தியம். இப்படி அந்நூலில் பகரப்பட்டிருந்ததைப் பரமஹம்சதேவரின் சிஷ்யர்கள் ஆமோதிக்கவில்லை. அவ்விஷயத்தைக் குறித்து அந்நூலாசிரியரோடு ஆராய்ச்சி செய்தல் வேண்டுமென்றும் அவர்கள் கருதினர்கள். அப்புத்தகத்தைப் பரமஹம்ச தேவர் கவனித்தார். அதன் பிறகு அதில் வழங்கப்பட்டுள்ள விஷயத்தைக் குறித்து அவர் தாமே தம் கருத்தைத் தெரிவித்தார். அதாவது: "பிரம்ம சமாஜத்தைச் சேர்ந்தவர்கள் இவ்வுலக வாழ்க்கையில் ஆழ்ந்து ஈடுபட்டிருக்கின்றனர். ஆகையினல்தான் இவ்வுலக வாழ்க்கைக்கு அவர்கள் அவ்வளவு பெரிய மதிப்புத் தருகின்றனர். காமத்திலும் காசு ஆசையிலும் மூழ்கியவர்களாக அவர்கள் இருக்கின்றனர். பரம்பொருளைப்பற்றிய அநுபூதி அடையப் பெற்றவன் அவர்கள் பேசுகிற பாங்கில் ஒரு பொழுதும் பேசமாட்டான். ஈசுவர அநுபூதியைப் பெற்ற பிறகு ஒருவனுக்கு இவ்வுலகம் காக்கையின் எச்சம் போன்று பொருளற்றதாகத் தென்படுகின்றது. சாதனங்களைத் தொடங்கிய ஆரம்பதசையில் இவ்வுலகசம்பந்தமான அனைத்தையும் நான் ஒதுக்கித் தள்ளிவிட்டேன். உலகப் பற்றுடையவர்களுடைய இணக்கத்தை மட்டும் நான் ஒதுக்கி வைத்தவன் அல்லேன். இடையிடையே ஆத்மசாதகர்களின்

இணக்கத்தையும் ஒதுக்கி வைக்கவேண்டிய அவசியத்தை நான் உணர்ந்தேன். சாதனங்கள் செய்துவந்த பக்தர்கள் ஒருவர் பின் ஒருவராக விழ்ந்து மடிவதை நான் அனுபவத்தில் பார்த்தேன். அந்நிகழ்ச்சி என்னை ஆருத்துயரத்தில் ஆழ்த்தியது. இப்பொழுதோ ஒரு சிறிய அளவில்தான் நான் நல்லாரிணக்கத்தை வைத்திருக்கிறேன்."

தாம் திரும்பி வருவதாக இயம்பிவிட்டுக் கிரீஷ்சந்திர கோஷர் ஏதோ அவசர காரியமாகத் தம் வீட்டுக்குப் புறப்பட்டுப் போனர்.

திரைலோக்கியர் தம்முடன் ஜெயகோபால் சேனரை அழைத்துக்கொண்டு பரமஹம்ச தேவரைத் தரிசிக்க வந்துசேர்ந்தார். பரமஹம்ச தேவர் முன்னிலையில் விழ்ந்து வணங்கிவிட்டு அவர்கள் அமர்ந்தனர். அங்கு வந்தவர்களின் உடல் நலனைக் குறித்துப் பரமஹம்ச தேவர் விசாரித்தார். இளைய நரேந்திரன் இப்பொழுது அவ்வறைக்குள்ளே வந்து பரமஹம்சர் முன்னிலையில் வீழ்ந்து வணங்கினர். "கடந்த சனிக்கிழமையன்று நீ ஏன் என்னை வந்து பார்க்கவில்லை?" என்று பரமஹம்ச தேவர் அவரிடம் கேட்டார்.

திரைலோக்கியர் பரம்பொருளைக் குறித்துச் சங்கீர்த்தனங்கள் பாட ஆயத்தமானர். அப்பொழுது பரமஹம்ச தேவர் பகர்ந்ததாவது: "அன்று தாம் அம்பிகையைக் குறித்துப் பாடிய பாடல்கள் என் உள்ளத்தைக்கொள்ளை கொண்டு போயின. அத்தகைய மேலாம் கருத்துக்கள் ததும்பிய பாடல்களைக் கேட்பது அரிதிலும் அரிதாகும். அன்றைக்கு ஏனையவர்கள் பாடிய பாடல்களால் நான் பரவசம் அடையவில்லை. நரேந்திரன் பாடிய பாடலும் கூட என் உள்ளத்தை ஆழ்ந்து கவரவில்லை. அதேபாடல்களைத் தாம் மீண்டும் இப்பொழுது பாடலாமே?"

திரைலோக்கியர் பாடிய பாடலில் அடங்கியிருந்த கருத்துக்களாவன: "சசிதேவியின் செல்வனகிய கோரா என்பவருக்கு வெற்றி வாய்ப்பதாகுக! நல்லொழுக்கம் அனைத்துக்கும் உறைவிடமாகிய சான்ருேரைப் போற்றுவோமாக. பேரன்புக்கு உறைவிடம், பேரானந்தக் கடல், மக்களுடைய உள்ளத்தைக் கொள்ளைகொண்டு போகிறவர், கட்டழகே வடிவெடுத்துள்ள மேனியை உடையவர், பளபளவென்று மின்னுகிற தங்கம் போன்ற அவருடைய கண்களிரண்டும் உள்ளத்தை அறவே கவர்கின்றன. அவருடைய மெல்லிய கரங்கள் இரண்டும் முழந்தாளை வந்து எட்டுகின்றன. தாமரைத் தண்டு போன்று நீண்டுள்ள அவர் கரங்கள் இரண்டும் மக்களைத் தமக்குச் சொந்தமாக்கும் பாங்கில் புறத்தே ஏந்தி நிற்கின்றன. ஒப்புயர்வற்ற அவருடைய முகவிலாசம் அப்பொழுதுதான் அலர்ந்துள்ள தாமரைப் பூப்போன்று கவர்ச்சிகரமாய் இருக்கிறது. அம் முகவிலாசத்தினின்று பெருக்கெடுத்து ஓடி வருகிற பேரன்பு உலகத்தவர் உள்ளத்தைத் தன்மயமாக்குகிறது. அவர் சிரசினின்று தொங்கிக் கொண்டிருக்கின்ற சுருண்ட முடிகள் அவருடைய கன்னங்களை அலங்கரிக்கின்றன. தெய்வீகப் பேரழகோடு கூடிய அவருடைய திருமேனியானது அன்பே வடிவெடுத்து மிளிர்கிறது. அதைக் காண்போருடைய கண்கள் அம்மேனியைப் பார்த்த வண்ணமாயிருக்கின்றன. பேரன்பால் தளதளத்திருக்கும் அவருடைய திருமேனி அன்பின் உருவாய்க் காட்சி தருகிறது. ஹரிபக்தியில் ஊறியுள்ள அத்திருமேனியானது ஆனந்தப்பரவசத்தில் அசைந்துகொண்டிருக்கிறது. கௌராங்கர் எனும் பெயருக்கேற்பப் பொன்னர் மேனியராக அவர் திகழ்கின்ருர். மதம் பிடித்த யானை போன்று அம்மேனியானது பேரன்புப் பெருக்கால் அசைந்துகொண்டிருக்கிறது. ஹரியின் மகிமையை ஓயாது பாடிக்கொண்டிருப்பது அவருக்கு உகந்த பொழுதுபோக்காகிறது. நல்லார்கள் உள்ளத்தில் அவர்கள் வணங்கும் தெய்வமாகக் கௌராங்கர் யாண்டும் வீற்றிருக்கிருர். மக்களுள் மாணிக்கமாக அவர் மிளிர்கிருர். பேரன்புப் பெருங்கடல் என்று அப்பெம்மானைப் போற்றுவது பொருந்தும். உலகத்தவர்களால் தீண்டத்தகாதவன் என ஒதுக்கிவைக்கப்பட்டவனை 'ஓ சகோதரா' என்று அன்புடன் அணைத்து இவர் கட்டித் தழுவுகிருர். இரு கரங்களையும் உயர்த்தி வைத்துக்கொண்டு அவர் நடனமாடுகின்ருர். ஹரியின் நாமத்தை அவருடைய நாவானது பாடியவண்ணமாயிருக்கிறது. இருகன்னங்களினின்றும் ஆனந்த

பாஷ்பம் ஓயாது பொழிந்துகொண்டிருக்கிறது. "பிரேமை பக்தியில் அவர் மூழ்கியிருக்கின்ருர். அதன் விளைவாக அவர் கண்ணீர் சிந்துகிருர்; கதறியழுகிருர்; மேனி முழுதும் விதிர்விதிர்த்த காட்சியைத் தருகிறது. ஆனந்தப் பரவசத்தால் தூண்டப்பட்டு அவர் கர்ஜிக்கிருர்; அடக்கமுடியாத அன்பு அவரிடத்திருந்து பீறிட்டுக்கொண்டு வெளியே வருகிறது. 'என் உள்ளத்தை அலங்கரிக்கிற ஹரி எங்கே?' என்று அவர் வினவுகிருர். அவருடைய மேனி முழுதும் புளகாங்கிதமாகக் காட்சி தருகிறது, கடம்ப மலர் போன்று அவருடைய மேனி தென்படுகிறது. பூமியில் படுத்துப் புரண்டு அவருடைய மேனி முழுதும் தூசி படிந்திருக்கிறது.

"மஹாவிஷ்ணுவின் திருவிளையாடல்களுக்கு உறைவிடமாயிருப்பவரே, தீனதயாளுவே, வங்காளநாட்டின் பெருமைக்குச் சான்றே, சைதன்யரே, பக்தர்களின் உள்ளத்திலே நிறைநிலாப் போன்று மிளிர்ந்து கொண்டிருப்பவரே, உமக்கு நமஸ்காரம்."

பரமஹம்சதேவர் அவ்வறையினின்று சிறிது தூரம் வெளியே சென்றுவந்தார். திரைக்கு அருகில் பெண்பாலர் அமர்ந்திருந்தனர். பரமஹம்சதேவரைத் தரிசித்தல் பொருட்டு அவர்கள் ஆவல் மிகப் பூண்டிருந்தனர். திரைலோக்கியர் இவ்வண்ணம் பாடிக்கொண்டு இருந்தார்.

பரமஹம்ச தேவர் திரைலோக்கியரைப் பார்த்து, "அன்னை பராசக்தியைக் குறித்துச் சிறிது பாடுவீராக" என்று வேண்டினர். திரைலோக்கியர் பாடியதாவது: "தாயே! மாந்தர்களிடம் நீ வைத்திருக்கும் அன்புக்கு எல்லை ஏதேனும் உண்டா? உன் அன்பை நினைந்துகொண்டு நான் ஆனந்தக் கண்ணீர் பெருக்குகிறேன்."

இப்பாடலுக்குச் செவிகொடுத்த இளைய நரேந்திரன் தியானத்தில் ஆழ்ந்து மூழ்கலாயினன். ஒரு மரக்கட்டை போன்று அவன் அசையாது அமர்ந்திருந்தான். அதைக் காணலுற்ற பரமஹம்சதேவர் மகேந்திரரிடம் மொழிந்ததாவது: "அந்த இளைஞனைப் பார். புறவுலக ஞாபகம் அனைத்தையும் அவன் புறக்கணித்துள்ளான்."

பரமஹம்சதேவரின் விருப்பத்திற்கிணங்கி திரைலோக்கியர் அன்னை பராசக்தியின்மீது மற்ருெரு பாடலைப் பாடினர்: "தாயே! நான் உன்மீது வைத்துள்ள அன்பை முன்னிட்டு நான் பித்தனுகும்படி அருள்புரிவாயாக. ஞானத்துக்கோ தத்துவ விசாரத்துக்கோ எனக்குத் தேவை ஏதும் இல்லை." ஹரியைக் குறித்து இன்னெரு பாடல் பாடும்படி ராம் என்ற பக்தர் திரைலோக்கியரை வேண்டினர். அவரும் பாடத் தொடங்கினர்:

"ஓ மனமே, ஹரியின் மகிமையைக் குறித்து நீ பாடுவாயாக. ஹரியின் நாமத்தைப் புகழ்ந்து நீ பாடுவாயாக. ஹரியின் நாமத்தை ஓதிக்கொண்டு ஓ மனமே, பிரபஞ்சத்துக்கு அப்பால் நீ செல்வாயாக. ஹரி நிலத்தில் உள்ளார்; நீரில் உள்ளார். தீயிலும் காற்றிலும் அவரே வீற்றிருக்கிருர். சந்திர சூரியர்களிடம் வீற்றிருப்பவரும் அவரே. அகண்டமாய் உள்ள ஜகத் முழுதிலும் ஹரியின் சான்னித்தியமே யாண்டும் நிலவிக் கொண்டிருக்கிறது." அடங்கிய குரலில் மகேந்திரர் திரைலோக்கியரிடம் "ஓ கௌரங்கா, நித்தியானந்தா — பாக்கியவான்களாகிய சகோதரர்களே! என்னும் பாடலைப் பாடுவிராக" என்று வேண்டினர். அப்பாடலைப் பாடும்படி பரமஹம்சதேவரும் அவரை வேண்டிக்கொண்டார். ஆங்குக் குழுமியிருந்த அனைவரும் ஒன்று சேர்ந்து அப்பாடலைப் பாடினர்கள். பரமஹம்சதேவரும் அவருடன் சேர்ந்துகொண்டு பாடினர். "அதோ பார், சகோதரர்களிருவரும் இங்குப் பிரசன்னமாயுள்ளார்கள். ஹரியினுடைய திருநாமத்தை உச்சரிக்கும்போது அவர்களுடைய கண்களினின்று ஆனந்த பாஷ்பம் பொழிகிறது. சிறிதேனும் இரக்கமில்லாது அவர்களைப் புடைத்த பாவிகளுக்குக் கைம்மாருக ஹரியின் திருநாமத்தை இவர்கள் அன்னவருக்கு வழங்கினர்கள். உலகத்தவரால் தீண்டத்தகாதவர்கள் என ஒதுக்கி வைக்கப்பட்டவர்களையும் இவர்கள் தங்களுக்குரிய சகோதரர்கள் என அன்புடன் தழுவிக்கொண்டனர். பிருந்தாவனத்திலே இவர்கள் வாழ்ந்திருந்தபொழுது இவர்களை மக்கள் கனுய் என்றும் பொலாய் என்றும் அன்புடன் கூறி அழைத்தார்கள்.

# எந்நாள் கண்ணி

(தாயுமானவர் இயற்றியது)

9-12. சத்தோடுசித்து ஆகித் தயங்கியோஆ னந்தபரி
சுத்த அகண்ட சிவம் தோன்றுநாள் எந்நாளோ.

தங்கத்தைக் கொண்டு செய்யப்படுகின்ற நகைகள் அனைத்தும் தங்கமயம். அதே விதத்தில் பரம்பொருளிடத்திருந்து வடிவெடுத்து வந்துள்ள பிரபஞ்சம் முழுதும் பரம்பொருள் மயம். பிரபஞ்சத்தில் இரண்டு பகுதிகள் இருக்கின்றன. ஒன்று சேதனம்; மற்றது அசேதனம். உயிருடன் கூடியது, உயிர் ஒடுங்கி உறங்கும் நிலையில் இருப்பது என இவை பொருள்படுகின்றன. உயிர் வகைகள் அனைத்தும் தங்களுடைய நிஜ நிலையாகிய பரத்தை எட்ட முயன்று கொண்டிருக்கின்றன. உறங்குகின்ற நிலையிலிருக்கும் அசேதனத்திடத்து இந்த முயற்சியைக் காணமுடியாது. பரவஸ்துவானது பிரகிருதியாகக் காட்சி கொடுத்துக் கொண்டிருப்பதற்கிடையில் அதனுடைய நிஜ நிலையினின்று அது இம்மியளவும் பிசகாதிருக்கிறது. இதற்குச் சான்று ஒன்று எடுத்துக்கொள்வோம். தங்கத்தினின்று நகைகள் பல செய்கிறோம். இத்தனை விதமான நகைகள் என்னென்ன பாங்குகளில் விளங்கிக் கொண்டிருந்தாலும் அவையாவும் தங்க மயமேயாம். அதே விதத்தில் பிரகிருதியின் கூறுகள் எத்தனை எத்தனையாக விரிவடையினும் அவை யாவற்றையும் துருவி ஆராயுமிடத்துச் சச்சிதானந்த சொருபமேயாம்.

பிறந்தது முதற்கொண்டு மனிதனும் மற்ற உயிர்களும் உணவை நாடி அலைகின்றனர். உணவை உண்பதன் மூலம் அநித்தியமான உடலைக் கூடிய வரையில் நித்தியப்பொருளாக வைத்திருக்க அவர்கள் அனைவரும் முயன்று வருகின்றனர். யாண்டும் அழியாதிருப்பது சிவம். தோன்றியிருந்து மறையும் பாங்குடையது பிரகிருதி. நிலையில்லாத பிரகிருதியைக் கொண்டு நிலைபேறுடைய பரம்பொருளை நிலை நாட்ட இத்தனை ஜீவர்களும் முயன்று வருகின்றனர். அதாவது அசத்தினின்று சத்பொருளைப் பெற அல்லது நிலைநாட்ட அவர்களனைவரும் முயலுகிறார்கள்.

உயிர்கள் அனைத்தும் இன்புற்றிருக்க விரும்புகின்றன. எவ்வுயிராவது துன்பத்தை நாடுவதில்லை. இன்ப நாட்டமோ உயிர்கள் யாவற்றுக்கும் பொதுவானது. இன்பம் என்று சொல்லுவதும் ஆனந்தம் என்று சொல்லுவதும் ஒன்றேயாம். ஸ்தாவர ஜங்கமமாக இலங்கும் உயிர்களனைத்தும் ஆனந்தத்தையே நாடுகின்றன.

பரவஸ்துவானது சத்-சித்-ஆனந்தமாக யாண்டும் நிலைபெற்று இருக்கிறது. இந்தச் சத்-சித்-ஆனந்தமே ஜீவகோடிகள் அனைத்துக்கும் இலக்காக அமைந்திருக்கிறது. இக்கோட்பாட்டின்படி உலகிலே நாஸ்திகன் என்னும் பெயர் பெற்றுள்ள ஜீவாத்மன் யாருமே இல்லை. அறிந்தோ அறியாமலோ, நேர்முகமாகவோ மறைமுகமாகவோ உயிர்கள் யாவும் வாழ்ந்திருக்க விரும்புகின்றன; அறிவை வளர்க்க அவாவுறுகின்றன; ஆனந்தத்தில் நிலைத்திருக்க நாடுகின்றன. இந்தச் சச்சிதானந்தப்பொருளை அந்தந்த மதவாதிகள் அவரவர்க்கு உகந்த பெயரிட்டு அழைக்கின்றனர். பெயர்கள் பல எனினும் பொருள் ஒன்றேயாம். அப்பொருளை நம் அண்ணல் தம் ஐதிகத்துக்கு ஏற்பச் சிவம் என்று அழைக்கிறார்.

ஒரு பொருளை மலினப்படுத்துதற்கு இரண்டாவது பொருள் தேவை. களிமண் தன்னளவில் சுத்தமானது. சலவை செய்யப்பட்ட வெள்ளை வேஷ்டியும் தன்னளவில் சுத்தமானது. ஆனால் அந்த வெள்ளை வேஷ்டியின்மீது களிமண் படிந்துவிட்டால் அது அசுத்தமாகிறது. களிமண் தன்னளவில் சுத்தமானது. பாண்டம் வனைவதற்கு வைக்கப்பட்டுள்ள களிமண்ணின்மீது கசங்கிப்போன வாழைப்பழம் விழுந்தால் அக்களிமண் பாண்டம் வனைவதற்கு உதவாது. இங்ஙனம் ஒருபொருளை மலினப்படுத்துதற்கு மற்றொரு பொருள் தேவையாய் இருக்கிறது. சச்சிதானந்தத்தை மலினப்படுத்துதற்குப் பிரபஞ்சத்தாலும் இயலாது. ஏனென்றால் ஜடப்பொருள் சேதனத்தோடு கலந்துகொள்ள இயலாது. பிறகு இரண்டு பொருள்கள் ஒன்றோடொன்று சீர்தூக்கப்படு

கிறபொழுது ஒன்று மற்றென்றுக்கு எல்லை கட்டுகிறது. ஆனால் அகண்ட சச்சிதானந்தம் என்று சொல்லுகிறவிடத்து எல்லையிலடங்காத பேரானந்தம் என அது பொருள்படுகிறது. இதுவே பரம்பொருளாகிய சிவத்தைப்பற்றிய உண்மையாம்.

**9–13. எங்கெங்கும் பார்த்தாலும் இன்புருவாய் [நீக்கமின்றித்**
**தங்கும் தனிப்பொருளைச் சாருநாள் எந்நாளோ.**

சேதனம் அசேதனத்தோடு சேர்ந்து கலக்க மாட்டாது எனினும் அசேதனத்தின் வாயிலாகச் சேதனம் தன்னை விளக்கவல்லது. பிரபஞ்சம் எங்குமுள்ள ஜடப்பொருளை ஆராய்ந்து பார்த்தால் சேதனம் தன்னைத் தானே விளக்கிக்கொள்ளுதற்கு அது கருவியாய் அமைகிறது. களிமண்ணால் உருவாக்கப்பட்ட வடிவம் ஒன்றை ஆனந்தத்தில் மூழ்கி இருக்கும்படி அமைப்பது சாத்தியம். அந்த ஆனந்தம் களிமண்ணுக்கு உரியதன்று. எனினும் ஆனந்தம் என்னும் தத்துவம் அதன் வாயிலாக மிளிரவல்லது.

பிரபஞ்சம் முழுதும் ஆனந்த சொரூபம். பிரபஞ்சத்திற்குத் தோற்றமும் இருப்பும் ஒடுக்கமும் உண்டு. ஆனால் எங்குத் திரும்பி எவ்வுயிரைப் பார்த்தாலும் அது ஆனந்தமாகவே காட்சி தருகிறது. இந்த ஆனந்தத்துக்கு மூலமாக இருப்பது பரமசிவம். உயிர்களனைத்தும் பரம்பொருளின் பற்பல தோற்றங்களாம். எத்தனை விதமான நகைகள் செய்தாலும் அவைகளுக்கு மூலப்பொருளாயிருக்கிற தங்கத்தின் தன்மையை மாற்ற யாருக்கும் இயலாது. அதேவிதத்தில் அகிலாண்டம் எங்கும் எண்ணரிய ஜீவகோடிகளாகக் காட்சி கொடுத்துக் கொண்டிருக்கின்றது பரம்பொருள். அப்பரம்பொருளின் பேரானந்த சொருபத்தை மாற்ற யாருக்குமே இயலாது. அதற்குப் புறம்பான நித்தியப்பொருள் வேறு ஏதும் இல்லையாதலால் அது நீக்கமற எங்கும் வியாபித்திருக்கிறது.

பிரபஞ்சத்திற்குத் தோற்றமும் ஒடுக்கமும் இருப்பதால் அது அநித்தியமானது. யாண்டும் அது தங்கியிருப்பதில்லை. ஓர் அறையின் மீது படுகின்ற சூரிய பிம்பத்துக்குத் தோற்றமும் ஒடுக்கமும் உண்டு. ஆனால் அதற்கு மூலப்பொருளாயிருக்கின்ற சூரியனுக்குத் தோற்றமும் ஒடுக்கமும் இல்லை. அங்ஙனம் அனைத்துக்கும் மூலப்பொருளாயுள்ள சச்சிதானந்த சிவத்துக்குத் தோற்றமும் ஒடுக்கமும் இல்லை. எண்ணிக்கையில் ஜீவர்கள் பலகோடி. கடலிலே அலைகள் கோடிக்கணக்காகத் தென்படுவதற்கு நிகர் ஜீவாத்மாக்கள். அலைகளின்மீது தென்படுகின்ற சூரிய பிம்பங்கள் எண்ணிக்கையிலடங்காதவைகள். ஆயினும் இவை யாவற்றுக்கும் மூலமாய் உள்ள சூரியன் தனிப்பொருள். வடிவத்தால் ஆனந்த மயமாகத் தென்படுகின்ற அனந்தங்கோடி ஜீவர்களுக்கு ஆதாரமாயிருப்பது அகண்ட சச்சிதானந்த சிவம். அகண்டமாயிருப்பதால் அது தனிப்பொருள்.

அலைகள் அனைத்தும் கடலிலே தோன்றி உருண்டோடுகின்றன. ஓடஓட வண்ணத்தில் அவைகள் பெரியவைகளாகின்றன. ஜீவவியக்தியும் அத்தகையது. சிற்றுயிராக வடிவெடுக்கிற ஜீவன் ஒன்று பரிணமித்துப் பேருயிராக முன்னேற்றமடைகிறது. இந்த முன்னேற்றத்துக்கு மூலகாரணம் அது எடுத்திருக்கிற வடிவு. ஆனால் ஆனந்தமோ சிற்றுயிர் பேருயிர் என்கின்ற பேதமின்றி யாண்டும் தன்மயமாக இலங்கிக்கொண்டிருக்கின்றது.

அலையானது கடலைச் சென்று சேரவேண்டிய அவசியமில்லை. யாண்டும் கடலின் ஒரு கூறாக அலை வடிவெடுத்திருக்கிறது. அதே விதத்தில் ஜீவாத்மன் பரமாத்மனைச் சென்றடைய வேண்டிய அவசியமில்லை. தன்னுடைய அஞ்ஞானத்தால் ஜீவாத்மன் ஒருவன் தனக்கும் தான் அடைய வேண்டிய பெரிய பொருளாகிய சச்சித்தானந்தத்திற்கும் வெகுதூரம் என்று மயங்கி இருக்கிறான். இம்மயக்கம் தெளிகிறவிடத்துத் தான்வேறு சச்சிதானந்தப் பொருள் வேறு என்னும் பேத உணர்வு அகலுகிறது. பரம்பொருளைப் பற்றிய பரஞானம் உதயமாகின்றபொழுது ஜீவாத்மன் தன் ஜீவவியக்தியை ஒதுக்கித் தள்ளுகிறான் சொருபத்தில் தான் வேறு சிவம் வேறு என்னும் பாகுபாடு அவனுடைய உள்ளத்தினின்று அகன்று போகிறது. எனவே அஞ்ஞானத்தை அகற்றுதற்குப் பரபோதம் ஒன்றே உற்ற உபாயம் என்னும் கருத்தை அடிப்படையாய்க் கொண்டதாம் இக்கண்ணி.

# கல்விப் பணிதான் முக்கியமானது

( சுவாமி விவேகானந்தர் )

கல்வி என்பது விஷயங்களை மூளையில் திணித்து வைத்துக்கொள்வது அன்று. விளங்காத விஷயங்களை மூளையில் திணித்து வைப்பதால் மனதில் போராட்டம் நிகழ்ந்து கொண்டே இருக்கும். வாழ்க்கை முழுவதும் அப்போராட்டம் இருந்துகொண்டே இருக்கும். வாழ்க்கையை உருவாக்கும், மனிதனை உருவாக்கும், பண்பை உருவாக்கும் கருத்துக்களை நன்ருக விளங்கிக்கொள்ள வேண்டும். தெளிவான ஐந்து கருத்துக்களை வாழ்க்கை மயமாக்குவோமானல் நூல்நிலையங்களிலுள்ள புத்தகங்களையெல்லாம் மனப்பாடம் செய்திருப்பவனை விட உயர்ந்த கல்வி கற்றவர்களாகின்ருேம். பாரமார்த்திகக் கல்வியானலும் சரி லௌகிகக் கல்வியானலும் சரி நம் தேசியப் பண்பின் அடிப்படையில் அமைவதுதான் இலட்சியக் கல்வியாகும். நம் நாட்டுப் பண்பை வளர்க்கக்கூடிய முறையில்தான் நம் மக்களுக்குக் கல்வி அளிக்க வேண்டும்.

பொதுமக்கள் கல்வி பெறுவார்களானல் உலகம் அழிந்து போய்விடும் என்ற கருத்து இருந்து வந்தது. இத்தகைய குழப்பமான கருத்துடையவர்களை இந்தியாவெங்கும் காணலாம். அவர்கள் பாமர மக்களுக்கு விஷயங்களை மறைத்து வைக்கவே விரும்புகின்ருர்கள். அவர்கள் தாங்கள்மட்டுமே மேலானவர்கள் என்னும் எண்ணத்தில் திருப்தியுடையவர்களாக வாழ்ந்து வருகிருர்கள். அவர்களுடைய கருத்துச் சமுதாயத்திற்கு நன்மை தருமா? அல்லது அவர்கள் சுயநலத்தினல் அப்படிப் பேசுகின்ருர்களா? செல்வம் படைத்த ஒரு சிலர் சுகபோக வாழ்வு வாழ்வதற்காகக் கோடானுகோடி ஆண்களும், பெண்களும் வறுமையிலும், அறியாமையிலும் மூழ்கிக் கிடக்கின்றனர். அவர்கள் கல்வி பெற்றுவிட்டால் சமுதாயமே தலைகீழாகக் கவிழ்ந்து போய்விடுமாம். சமுதாயத்தில் பெரும்பகுதியினர் யார்? நீங்களும் நானும் உயர்வகுப்பைச் சார்ந்த சிலரும் சமுதாயத்தில் பெரும்பகுதியினர்களாக இருக்கிருேமா? பாமரமக்கள் பெரும் பகுதியினராக இருக்கிருர்களா? பாமரமக்களுக்கிடையே கல்வியும், அறிவும் ஓங்குவதற்கு ஏற்பத்தான் நாடு முன்னேற்றம் அடையும். நாம் உயர வேண்டுமானல் பாமர மக்களிடம் கல்வியைப் பரப்பும் செயலைச் செய்தாகவேண்டும். பாமர மக்களுக்குக் கல்வியைக் கொடுத்து அவர்களை உயர்த்துங்கள். அப்பொழுதுதான் நம் நாடு உயர்வடைய முடியும்.

கல்வி ஒன்றே இப்பொழுது தேவை. ஐரோப்பாவிலுள்ள பல நகரங்களுக்கு நான் சென்றிருக்கிறேன். அங்கே நான் மக்களுடைய வாழ்க்கையைக் கவனித்திருக்கிறேன். சாதாரண ஏழை எளியவர்களுக்கும் வாழ்க்கை வசதியும், கல்வியும் அங்கு அமைந்து இருக்கின்றன. அங்குள்ள ஏழை மக்களைப் பார்த்த பொழுது நம் நாட்டில் உள்ள ஏழைமக்களின் நிலை ஞாபகத்திற்கு வந்தது. நம் நாட்டு ஏழைமக்களின் நிலையைக் குறித்து நான் அப்பொழுது கண்ணீர் சிந்தியது உண்டு. அந்நாட்டு ஏழை மக்களுக்கும், நம் நாட்டு ஏழை மக்களுக்கும் மிகப் பெரிய வேற்றுமை இருப்பதற்குக் காரணம் என்ன? கல்விதான் அதற்குக் காரணம் என்பது நான் பெற்ற விடையாகும்.

நம் நாட்டில் பின்தங்கிய மக்களுக்கு நாம் செய்யவேண்டிய பணி பொருத்தமான கல்வியைத் தருவதாகும். அவர்கள் தாங்களும் மனிதர்கள் என்னும் உணர்ச்சியைப் பெறுவதற்கு உதவவேண்டும். அவர்களுடைய அறிவுக்கண் திறக்கப்படவேண்டும். தங்களைச் சுற்றிலும் உள்ள உலகத்தில் என்ன நிகழ்ந்துகொண்டு இருக்கிறது என்பது அவர்களுக்குத் தெளிவாகத் தெரியவேண்டும். அவர்கள் தங்களுடைய விடுதலைக்குத் தாங்களே பாடுபட்டாகவேண்டும். நல்வாழ்வுக்குரிய கருத்துக்களை அவர்களுக்குத் தரவேண்டும். அவ்வுதவியை அவர்களுக்குச் செய்தால் அவர்களுக்கு வேண்டிய நன்மைகள் அதைத் தொடர்ந்து வரும். நல்வாழ்வுக்கு வேண்டிய கருத்துக்களை அவர்களுக்கு நாம் தந்துவிடவேண்டும். அதன் பிறகு அவர்கள் அவற்றை நடைமுறைக்குக் கொண்டு வருவதற்காகச் செயல்படவேண்டும். இந்தியாவில் நாம் இதைச் செய்தாகவேண்டும்,

# ஆத்ம தரிசனம்

(ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள் 1982 இல் திருப்பராய்த்துறை ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவன அந்தர் யோகத்தில் நிகழ்த்திய சொற்பொழிவு)

[220ஆம் பக்கத் தொடர்ச்சி]

பழங்காலத்து ரிஷிகள் மணந்துகொண்டு இல்லற வாழ்க்கை வாழ்ந்து வந்தார்கள். இல்லற வாழ்க்கை வாழ்ந்ததற்கிடையில் பிரம்மச்சரியத்தையும் கடைப்பிடித்து வந்தார்கள். காமத்தை வென்றவர்களாக வாழ்ந்து வந்தார்கள். இக்காலத்துக் குடும்பிகளுக்கு அவர்கள் வாழ்ந்த வாழ்க்கை ஒரு பெரிய பாடமாகும். பிரம்மச்சரிய விரதம் பிரம்மச்சரிய ஆச்ரமத்திலேயே நின்றுவிடுவதன்று. வாழ்க்கையின் கடைசிவரையில் பிரம்மச்சரியம் கடைப்பிடிக்கவேண்டும். பிரம்மச்சரிய ஆசிரமத்தில் வாழ்க்கை தொடங்குகிறது. புலன்களை நன்கு கட்டுப்படுத்தியவர்களுக்கே இல்லற வாழ்வில் புகுவதற்கு அனுமதி தரப்பட்டது. விவாகம் ஆகி இரண்டொரு சத்புத்திரர்களைப் பெற்றன பிறகு பழைய படி தவத்தில் ஈடுபட்டார்கள். வாழ்க்கையைத் தவத்துக்கென்று ஒப்படைப்பவன் ஆரியன் என அழைக்கப்படுகின்றான். காமத்துக்கு வசப்பட்டு வாழ்பவன் அனரியன் ஆகின்றான். காமத்துக்குப் பிறந்தவர்கள் அனரியர்கள் ஆகிறார்கள். தவப்புதல்வன்தான் ஆரியன் ஆகின்றான். ஆரியன் என்பது ஒரு ஜாதியைக் குறிக்கும் பதம் அன்று. பண்பட்ட மேலோர்களைத்தான் ஆரியன் என்னும் பதம்குறிக்கிறது. மனபரிபாகம், தூய்மை, புலனடக்கம் இவை அனைத்தையும் பெற்றிருப்பவன் ஆரியன். ஐயா என்று சொல்லுவதும் ஆரியனைக் குறிக்கும். ஆரியர்களை உண்டு பண்ணுவது நம்முடைய திட்டமாக இருக்கவேண்டும்.

எந்த நாடு அதிக ஆரியர்களைத் தோற்றுவிக்கின்றதோ அந்த நாடு நாகரிகத்தில் தலைசிறந்ததாகிறது. ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய வாழ்வு பழங்கால ரிஷிகள் வாழ்க்கைக்கு ஒத்திருந்தது. பரமஹம்ஸர் சாரதா தேவியாரிடம் கொண்டிருந்த மனப்பாங்கு மிக உயர்ந்ததாகும். ஒரு சமயம் சாரதா தேவியார் ஸ்ரீ ராமகிருஷ்ணரைக் கேட்டதாவது: "நீங்கள் என்னை எவ்வாறு கருதி வருகின்றீர்கள்?" அதற்கு ஸ்ரீ ராமகிருஷ்ணர் கொடுத்த விடையாவது: "நான் வழிபடும் தெய்வம் சந்திரமணி தேவி என்ற வடிவத்தில் தோன்றி இந்த உடலை ஈன்றெடுத்தாள். அதே தெய்வம் சாரதாமணியாகிய உன் வடிவத்தில் தோன்றி எனக்குப் பணிவிடை செய்து வருவதாக நான் காண்கின்றேன். ஆகவே உன்னை நான் பராசக்தி சொருபமாகக் காண்கின்றேன்." ஸ்ரீ ராமகிருஷ்ணர் கருதியது போன்றே ஸ்ரீ சாரதா தேவியாரும் ஸ்ரீ ராமகிருஷ்ணரைப் பரம்பொருள் சொருபமாகக் கருதினர். அவர்கள் இருவரும் தங்களை உடல் சொருபமாகக் கருதவில்லை. உடல் உறவையும், உடல் உணர்வையும் கடந்தநிலையில் அவர்கள் விவாகம் செய்துகொண்டார்கள். விவாகத்துக்குப் பின்பும் பிரம்மச்சரிய விரதத்தினின்றும் இம்மியளவும் வழுவாது 'காப்பது விரதம்' என்னும் பெருநிலையில் இருந்து தவ வாழ்வு வாழ்ந்து வந்தார்கள்.

பிரம்மச்சரிய விரதத்தில் உண்டாகும் பலாபலன்களை ஆராய்வதற்கு முன்பு பிரம்மச்சரியம் கடைப்பிடித்து வந்த ஒரு மூர்த்தியின் பண்பாட்டை ஆராய்ந்தால் பிரம்மச்சரிய விரதத்தின் நலம் நமக்கு நன்கு விளங்கும். நம்மிடையே சிறந்த நூல்களாக இராமாயணம், மகாபாரதம் என்னும் இரண்டு நூல்கள் இருக்கின்றன. 'சத்யம் வத, தர்மம் சர' என்பதில் மானுடப் பண்பாடு முழுவதும் அடங்கி இருக்கிறது. அவ்விரண்டு கோட்பாடுகளுக்கும் விளக்கமாக இராமாயணம், மகாபாரதம் என்னும் இரண்டு நூல்கள் இருக்கின்றன.

இராமாயணத்தின் கதாநாயகன் இராமன் ஆவான். இராமனுக்கு அடுத்தபடியாகச் செயற்கரிய செயலைச் செய்து முடித்தவன் ஆஞ்சநேயன். ஆஞ்சநேயன் ஒரு பிரம்மச்சாரி ஆவான். மகாபாரதத்தில் தர்மரைக் கதாநாயகராகச் சொல்லலாம். எனினும் ஆதியோடந்தமாக மகாபாரதத்தில் ஈடுபட்டு இருந்தவர் பீஷ்மர் ஆவார். அவர் பிறவியிலிருந்தே பிரம்மச்சாரி

யாக இருந்தார். ஆக இரண்டு இதிகாசங்களிலும் இரண்டு பெரிய மூர்த்திகள் பிரம்மச்சரியத்தின் மகிமைகளை விளக்குவதற்கென்றே அமைந்திருக்கின்றூர்கள்.

ஆஞ்சநேயன் செய்தஅரியசெயலைஆராய்ந்து பார்ப்போம். சீதையை இழந்த இராமனும் இலட்சுமணனும் தென்திசை நோக்கிச் சென்றூர்கள்.அவர்கள் இருவரும் சீதையைத் தேடிக்கொண்டு பம்பாநதி தீரம் வந்தார்கள். ஆங்கு அண்ணன் வாலியின் உபத்திரவத்தைப் பொறுக்கமாட்டாது தம்பி சுக்ரீவன் மதங்க மகரிஷி ஆச்ரமத்தில் அடைக்கலம் புகுந்திருந்தான். அவனுடன் அவனுடைய சில மந்திரிமார்களும் இருந்தனர். அவனுடைய மந்திரிகளுள் ஆஞ்சநேயன் ஒருவனுவான். இராமன், இலட்சுமணன் ஆகிய இரண்டு மனிதர்களைப் பார்த்ததும் ஆஞ்நேயனைத் தவிர சுக்ரீவனும் மற்ற மந்திரிகளும் ஓட்டம் பிடித்து விட்டனர். அவர்களை ஓடவேண்டாம் என்று ஆஞ்சநேயன் கூறியும் அதை அவர்கள் கேளாது ஓடினூர்கள். ஆஞ்சநேயன் மட்டும் அசையாது நின்றூன். இராமன், இலட்சுமணன் இருவரும் நடந்து வருவதை ஆஞ்சநேயன் நெடுந்தூரத்தில் இருந்து பார்த்தான். பயம் இன்னதென்பதையே அறியாதவனுக ஆஞ்சநேயன் இருந்தான். இராம லட்சுமணர்கள் அருகில் வந்ததும் "முரண்பாடே வடிவெடுத்தவர்களாக இருக்கின்ற நீங்கள் இருவரும் யார்?" என்று அவர்களைக் கேட்டான். "எங்களிடத்தில் நீ என்ன முரண்பாடு காண்கின்றூய்?" என்று இலட்சுமணன் கேட்டான். "நீங்கள் இருவரும் தவசிகள் போன்று வேடம் தரித்து இருக்கின்றீர்கள். ஆனுல் கொடிய ஆயுதங்களைக் கையில் வைத்து இருக்கின்றீர்கள். தவசிகளுக்குக் கொடிய ஆயுதங்கள் அவசியமில்லை. நான் காண்கின்ற முரண்பாடுகளுள் இது ஒன்றூகும்" என்றூன் ஆஞ்சநேயன். "இன்னும் என்ன முரண்பாடு காண்கின்றூய்?" என்று இலட்சுமணன் ஆஞ்சநேயனைக் கேட்டான். ஞானிகள் போன்று தென்படுகிறீர்கள். ஆனுல் உங்கள் முகத்தில் விசனக்குறிகள் தென்படுகின்றன. ஞானிகளுக்கு விசனம் இல்லை. இது நான் காண்கின்ற இரண்டாவது முரண்பாடு" என்றூன் ஆஞ்சநேயன். "இன்னும் என்ன முரண்பாடு காண்கின்றூய்?" என்று இலட்சுமணன் கேட்டான். "நீங்கள் தேவர்கள் போன்று தென்படுகின்றீர்கள். தேவர்களுடைய பாதம் பூமியில் படியாது. ஆனுல் உங்களுடைய பாதம் பூமியில் படிகின்றது. இது நான் காண்கின்ற மூன்றூவது முரண்பாடு ஆகும்" என்றூன் ஆஞ்சநேயன். ஆஞ்சநேயனுடைய வாசகத்தை கேட்டு இலட்சுமணனிடம் இராமன் பகர்ந்ததாவது: "இலட்சுமணு! இவன் கற்றவன்; இவனிடம் நாம் நட்புக் கொள்ளுதல் வேண்டும். இவனுடைய நட்பு நமக்குப் பயன்படும்." ஆஞ்சநேயன் அவர்களைக்கேட்ட மூன்று கேள்விகளில் தன் திறமை முழுவதையும் வெளிப்படுத்தினுன். மூவரும் ஒருவரை ஒருவர் நன்கு அறிந்து கொண்டார்கள். அதன் பிறகு இலட்சுமணன் தங்கள் வரலாற்றைச் சுருக்கமாகவும், விளக்கமாகவும் ஆஞ்சநேயனுக்கு எடுத்துக் கூறினுன். அவர்கள் வரலாற்றை ஆஞ்சநேயன் கேட்டு, "இவ்வனத்துள் நீங்கள் நடந்து செல்வது மிகவும் சிரமம். என் தோளின் மீது நீங்கள் அமருங்கள். உங்கள் இருவரையும் சுமந்து சென்று சுக்ரீவனிடத்தில் சேர்ப்பிக்கின்றேன். உங்கள் இருவருக்கும் சுக்ரீவனுக்கும் இடையில் நட்பை உண்டாக்கி வைப்பேன்" என்றூன். அவன் கூறியபடியே அவர்கள் மூவருக்கிடையில் நட்பை ஏற்படுத்தினுன். ஆஞ்சநேயன் இராமனுக்குச் செய்தது போன்று தென்படும் இந்த நன்மை அவன் உலகுக்குச் செய்த முதல் நன்மை யாகும்.

சீதையைக் கண்டு பிடிப்பதற்காகச் சுக்ரீவன் தன் சேனைகளை நாலாபக்கமும் அனுப்பினுன். தென்திசை நோக்கிச் சென்ற கூட்டத்தில் ஆஞ்சநேயனும் சென்றூன். இராமன் கணையாழியை ஆஞ்சநேயன் கையில் தந்தான். ஆஞ்சநேயன் அதை வாங்கிக்கொண்டு மற்ற வானரங்களோடு கடற்கரை வந்து சேர்ந்தான். மேற்கொண்டு செல்வதற்குக் கடல் தடையாக இருந்தது. ஆஞ்சநேயன் சிந்திக்கலானுன்: "சீதையைத் தேடுவதில் நான் தோல்வி அடையமாட்டேன். தோல்வி அடைந்து விட்டதாக நான் இராமனிடம் போய்ச் சொல்லமாட்டேன். பட்டினி கிடந்து இங்கேயே உயிர்

துறப்பேன்.'' இங்ஙனம் ஆஞ்சநேயன் சிந்தித்துக்கொண்டிருக்கையில் ஜாம்பவான் ஆஞ்சநேயனைப் பார்த்துப் பகர்ந்ததாவது: "ஆஞ்சநேயா! நீ எத்தகையவன் என்பதை நீ அறிவாயா? உன்னுடைய பராக்கிரமத்தை நீ மறந்து விட்டாயா? நீ சிறுவனாக இருந்தபொழுது சூரியனைக் கனி என்று நினைத்துத் தாவிப்பிடிக்க முயன்றாய். இது போன்று நீ எத்தனையோ பராக்கிரமச் செயல்களில் ஈடுபட்டு இருந்தாய். அவற்றையெல்லாம் இப்பொழுது ஞாபகப்படுத்திக்கொள்."

இங்ஙனம் ஜாம்பவான் அனுமனுக்குப் புகட்டியதில் உலக மக்கள் அனைவருக்கும் பெரிய பாடம் அமைந்திருக்கிறது. ஒவ்வொரு மனிதனிடத்தும் தெய்விகம் மறைந்து கிடக்கின்றது. ஒரு சிலருக்கு மட்டும் அது தனி உரிமை அன்று. சரீரம் எடுத்துள்ள அனைவரிடமும் தெய்விகம் புதைந்து கிடக்கிறது என்பதை நாம் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். நம்மிடம் புதைந்து கிடக்கும் தெய்வத்தன்மையை நாம் ஞாபகப்படுத்திக்கொள்ளும் அளவு நம்முடைய வாழ்வு பெருவாழ்வாக மாறுகிறது. ஆஞ்சநேயனுக்குப் பழைய நினைவுகளை ஞாபகத்துக்குக் கொண்டு வந்தவுடன் அவனிடம் ஆத்மபோதம் தலையெடுத்தது. அவன் விசுவரூபம் எடுத்தான். சீதாப்பிராட்டி எங்கிருந்தாலும் அங்குத் தான் சென்றுவிடமுடியுமென்று தீர்மானித்தான். வானவெளியில் புறப்பட்டான். வழியில் வந்த இடைஞ்சல்களை எல்லாம் சமாளித்தான். இராம காரியம் பூர்த்தியாகும் வரையில் ஓய்வெடுப்பதில்லை என்று அவன் தீர்மானித்தான். பராக்கிரமமே வடிவெடுத்தவனாக வானவெளியில் சென்று மாலை நேரத்தில் அவன் லங்காபுரியில் இறங்கினான்.

இலங்கையில் லங்காதேவி என்ற தெய்வம் காவல் காத்துக்கொண்டிருந்தாள். அந்தத் தெய்வத்தின் அனுமதியின்றி யாரும் இலங்கைக்குள் பிரவேசிக்கக்கூடாது. மீறிப் பிரவேசிப்பார்களானால் இலங்கைக்கு அழிவுக்காலம்வந்துவிட்டது என்பதற்கு அது அறிகுறியாகும். ஆஞ்சநேயனுக்குத் தன் வடிவத்தைச்சிறியதாகவும், பெரியதாகவும் ஆக்கிக்கொள்ளும் வல்லமை இருந்தது. அவன் இலங்கையில் இறங்கும் பொழுது சிறிய வடிவம் எடுத்திருந்தான். "குரங்கே, ஓடிப்போ" என்று லங்காதேவி விரட்டினாள். "நான் ஊரைப்பார்க்க வந்துள்ளேன். ஊரைப்பார்த்த பிறகு திரும்பிப்போய் விடுகிறேன்" என்று ஆஞ்சநேயன் மரியாதையுடன் கூறினான். "குரங்கே, ஓடிப்போ" என்று லங்காதேவி ஆஞ்சநேயன் கன்னத்தில் அறைந்தாள். ஆஞ்சநேயன் திருப்பி லங்காதேவிக்கு அடிகொடுத்தான். லங்காதேவி சுருண்டு விழுந்தாள்.

ஆஞ்சநேயன் சிறிய வடிவத்தில் இருந்து கொண்டு இலங்கையைச் சுற்றிப்பார்த்தான். இராவணன் அரண்மனையில் தூங்கிக்கொண்டிருந்த பொழுது ஆஞ்சநேயன் அவனைப் பார்த்தான். காமநோய் ஒன்று மட்டும் அவனிடம் இல்லாவிட்டால் இராவணனுக்கு நிகரானவனை உலகில் காணமுடியாது என்று இராவணனுக்கு மதிப்புப் போட்டான். மண்டோதரி தூங்குவதைப் பார்த்தான். அவள் ஆடம்பரத்தோடு இருப்பதைப்பார்த்து அவள் சீதையாக இருக்கமுடியாது என்று தீர்மானித்தான். கடைசியாக அசோக வனத்தை அடைந்தான். ஆங்குச் சீதை இருப்பதைக் கண்டுபிடித்தான். அனுமன் சீதையைப் பார்த்தபொழுது அவள் தற்கொலை புரிந்துகொள்ளும் முயற்சியில் ஈடுபட்டிருந்தாள். ஆஞ்சநேயன் ஒரு மரத்தின்மீது அமர்ந்துகொண்டு அடங்கிய குரலில் இராமனுடைய மகிமையைப் பாடினான். "இராமனுடையமகிமையைப் பாடுகின்றவர் யார்?"என்று சீதை கேட்டாள். "தாயே! நான் இராமதூதனாக வந்திருக்கின்றேன்; நான் அரக்கன் அல்லேன்; நீங்கள் அனுமதி தந்தால் உங்கள் முன் வருகின்றேன்; நான் இராமதூதன் என்பதையும் நிரூபிக்கின்றேன்" என்று அனுமன் சாமர்த்தியமாகப் பேசினான். சீதை தன்முன் ஆஞ்சநேயன் வருவதற்கு அனுமதி தந்தாள். ஆஞ்சநேயன் சீதை முன்பு பிரசன்னமானான். தான் இராமதூதன் என்பதைச்சீதைக்குவிளக்கினான். சீதையைத் தற்கொலை செய்வதினின்று காப்பாற்றி அசோக வனத்தினின்று அவளை மீட்க இராமன் வரும் விஷயத்தைத் தெரிவித்தான். சீதை அதைக்கேட்டு மகிழ்ச்சி அடைந்தாள். அனுமன் சீதையிடமிருந்து விடைபெற்றுக்கொண்டு திரும்பினான். இராவணனுடைய

வலிமையை அறிந்துகொள்வதற்கு அனுமன் திட்டம்போட்டான். இராவணனுக்குப் பிரிய மான அசோக வனத்தை அழிக்க முயன்ருன். இந்தச் செய்தி இராவணனுக்குச் சென்றது. "அசோக வனத்தை அழித்துக்கொண்டிருக்கும் குரங்கைக் கட்டிப்பிடித்து வாருங்கள்" என்று இராவணன் உத்தரவு போட்டான்.

இராவணன் உத்தரவுப்படி இராவணனு டைய ஆட்கள் ஆஞ்சநேயனைக் கட்டிப்பிடித் துப்போய் இராவணன் முன் நிறுத்தினர்கள். இலங்கேசனகிய இராவணன் "ஆஞ்ச நேயனை யார் என்று கேளுங்கள்" என்று தன் ஆட்களுக்கு உத்தரவு போட்டான். ஆஞ்ச நேயன் பகர்ந்ததாவது: "இலங்கேசா, நான் உனக்கு ஒரு செய்தி கொண்டு வந்திருக்கின் றேன். நான் அச்செய்தியைச் சொல்லி முடிக் கும்வரை நீ கோபிக்காது கேட்கவேண்டும். நான் சொல்லி முடித்தான பிறகு நீ என்ன வேண்டுமென்ருலும் செய்துகொள்ளலாம்."

இராவணன் "நீ கூறும் செய்தி யாது?" என்று கேட்டான். "நீ சீதையைத் திருடிக்கொண்டு வந்திருக்கிருய். அது பெரும் குற்றமாகும். இராமன் சுக்ரீவனேடு நட்புக்கொண்டு இருவ ரும் சேர்ந்து உன்னை ஒழித்துக்கட்ட வருகின் ருர்கள். உயிர் பிழைக்கவேண்டும் என்னும் எண்ணம் உனக்கு இருக்குமானல் நீ சீதையை இராமனிடம் கொண்டுபோய்ச் சேர்த்துவிட்டு இராமனிடம் மன்னிப்புக் கேட்டுக்கொள். இரா மனும் உன்னை மன்னிப்பான்" என்று ஆஞ்ச நேயன் இராவணனிடம் கூறினன். இராவணன் கோபப்பட்டு "ஆஞ்சநேயனைக் கொன்று தள் ளுங்கள்" என்று உத்தரவு போட்டான். இரா வணனின் தம்பி விபீஷணன் "தூதனைக் கொல் லக்கூடாது" என்ருன். "அப்படியானல் அக் குரங்கின் வாலில் தீ வைத்துக் கொளுத்துங் கள்" என்ருன் இராவணன். அனுமனின் வாலில் துணியைச்சுற்றி நெருப்பு வைத்தார்கள். இலங் கைக்கு நெருப்பு வைத்துவிட்டு ஆஞ்சநேயன் இராமனிடம் ஓடிவந்தான்.

இராமனிடம் சூடாமணியைக் காண்பித்து அசோகவனத்தில் சீதை இருப்பதைத் தெரி வித்தான். அசோக வனத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளை எல்லாம் விளக்கமாகக் கூறினன். "நான் உனக்கு என்ன கைம்மாறு செய்ய முடி யும்?" என்று இராமன் ஆஞ்சநேயனைக் கட்டித் தழுவிக் கொண்டார். அதன் விளைவை ஆஞ்ச நேயனும் இராமனும் அறிந்தார்கள். இராமன் ஆஞ்சநேயனைத் தழுவிக்கொண்டதால் ஏற் பட்ட விளைவு வேறு யாருக்கும் தெரியாது. இராமன் அயோத்தியைவிட்டுக் காட்டுக்குப் புறப்பட்டபொழுது அயோத்தி மக்கள் அனைவ ரும் கண்கலங்கினர்கள். இராமன் தண்டகா ரண்யவனத்துக்கு வந்ததும் ரிஷிகள் அனைவரும் இராமனைக் கைகூப்பி வணங்கினர்கள். இராம னுடைய மேனியைப் பார்க்கவேண்டுமென்று ரிஷிகள் ஆவலோடு வனத்தில் இருந்தார்கள். இராமன் காட்டுக்கு வந்ததும் அவர்களுடைய விருப்பம் நிறைவேறியது. ஒவ்வொரு ரிஷியை யும் இராமன் தழுவிக்கொண்டார். அப்பொழுது ரிஷிகள் பிரம்ம ஞானம் பெற்ருர்கள். ரிஷி களுக்குப் பரஞானம் அந்தப் போக்கில் வந்து வாய்த்தது. இராமன் ஆஞ்சநேயனைத் தழுவிய பொழுது ஆஞ்சநேயனும் பிரம்ம ஞானம் பெற் ருன். அதை இராமனும் ஆஞ்சநேயனும் அறி வார்கள். மற்ற யாரும் அறியமாட்டார்கள்.

இராமராவணப்போரில் ஆஞ்சநேயன் ஏராள மாக உதவி புரிந்தான். இராமனும், இலட்சு மணனும் நாகாஸ்திரத்தால் கட்டுண்டு கிடந்த னர். அவர்களை அக்கட்டிலிருந்துவிடுவிப்பதற்கு ஆஞ்சநேயன் சஞ்சீவி மலையையே எடுத்து வந்துவிட்டான். போரில் இராம இலட்சுமணர் களைத் தோளில் சுமந்திருந்து உதவி செய் தான். சரணகதி என்று வந்த விபீஷணனை எடுத்துக் கொள்ளலாம் என்று கூறுவதில் ஆஞ்சநேயன் முதன்மையாக இருந்தான்.

பரதன் இராமனுடன் ஓர் உடன் படிக்கை செய்து கொண்டான். பதினன்கு ஆண்டுகள் முடிந்து இராமன் அயோத்திக்கு வராவிட்டால் பரதனை உயிருடன் காண முடியாது என்பதே அவ் உடன்படிக்கையாகும். இராவணனை அழித்த பின்பு பாரத்வாஜர் ஆச்ரமத்துக்கு மகரிஷியின் உத்தரவிற்கு ஏற்ப இராமன் போக வேண்டியிருந்தது. அதனல் அயோத்தி செல்வதற்கு ஒரு நாள் கால தாமதம் ஆகும் போலிருந்தது. பரதனுக்குச் செய்தி சொல்லி அனுப்புவதற்காக இராமன் ஆஞ்சநேயனை அழைத்தார். இராமன் ஆஞ்சநேயனிடம் பகர்ந்ததாவது: "நெடுநாள் ஆட்சியிலிருந்

தால் பதவிப்பற்று வந்துவிடும். பரதனும் பதினான்கு ஆண்டுகள் ஆட்சி செய்து வந்துள்ளான். பரதனுக்கு ஒருவேளை ஆட்சிப்பற்று உள்ளத்தில் வந்திருக்குமாயின், அயோத்தியைப் பரதனே ஆட்சிபுரியட்டும். நாம் வனவாசத்திலேயே இருந்துவிடுவோம். பரதனுடைய மனநிலை எத்தகையது என்பதை ஆஞ்சநேயா! நீ அறிந்து வரவேண்டும்."

இராமன் கூறியதை ஏற்றுக்கொண்ட ஆஞ்சநேயன் அயோத்திக்கு வந்து பரதனைக் கண்டான். இராமன் அயோத்திக்கு வருகின்ற அறிகுறி இல்லாதிருப்பதை அறிந்த பரதன், தீ மூட்டி "ராம், ராம்" என்று கூறிக்கொண்டே தீயை மும்முறை வலம் வந்து கொண்டிருந்தான். பரதனுடைய மனநிலையை அறிந்த ஆஞ்சநேயன் "பாரத்வாஜ ஆச்ரமத்தில் இராமன் உணவருந்திக்கொண்டிருக்கின்றார். விரைவில் வந்துவிடுவார்" என்று கூறிப் பரதன் தீயில் பாய்வதைத் தடுத்து நிறுத்தினான்.

ஆஞ்சநேயன் ஒவ்வொருவருக்கும் பேருபகாரம் செய்துள்ளான். ஆனால் அவன் தனக்கென்று யாருடைய உதவியையும் தேடிக்கொள்ளவில்லை. ஆஞ்சநேயன் நைஷ்டிகப் பிரம்மச்சாரியாக இருந்தமையால் அவனுக்குப் பிறருடைய உதவி தேவைப்படாதிருந்தது. நைஷ்டிகப் பிரம்மச்சாரி உலகத்துக்கு உதவுகின்றான். உலகத்தின் உதவி அவனுக்குத் தேவையில்லை. பிரம்மச்சரிய விரதத்திற்கு மகாவிரதம் என்று பெயர். அவ்விரதத்தை ஏற்றுக்கொண்டிருப்பவன் மகாபுருஷனாகின்றான். பிரம்மச்சரியம் அனுஷ்டிக்கின்ற அளவு மனிதன் மேன்மை அடைகின்றான். குடும்ப வாழ்வு வாழ்கின்றவர்களுக்கும் பிரம்மச்சரியம் அவசியம்.

இராமன் விவாகம் செய்து கொண்டபொழுது சீதைக்கு வயது ஆறு. இராமனுக்கு வயது அப்பொழுது பதினாறு. அதே போன்று ஸ்ரீ ராமகிருஷ்ணரும், சாரதா தேவியாரும் விவாகம் செய்து கொண்டார்கள். ஸ்ரீ சாரதா தேவியாருக்கு ஆறு வயதாக, ஸ்ரீ ராமகிருஷ்ணருக்கு இருபத்து மூன்று வயதாக இருந்தபொழுதும் அவர்களுக்கிடையில் விவாகம் நிகழ்ந்தது. இராமனும், சீதையும் விவாகம் செய்துகொண்டு அயோத்தியில் வாழ்ந்த பன்னிரண்டு ஆண்டுகளும் பிரம்மச்சரிய விரதம் கடைப்பிடித்து வந்தனர். பிறகு பதினான்கு ஆண்டுகள் வனவாசம் செய்தபொழுதும் தவத்தில் ஈடுபட்டுப் பிரம்மச்சரிய விரதம் கடைப்பிடித்துவந்தனர். மணம் முடிந்தபின் இருபத்தாறு ஆண்டுகள் இருவரும் தவத்தில் ஈடுபட்டிருந்தார்கள். சீதைக்கு முப்பத்திரண்டு வயதும், இராமனுக்கு நாற்பத்திரண்டு வயதும் ஆன பிறகு தான் லவன், குசன் என்ற புத்திரர்கள் அவர்களுக்கு வாய்த்தார்கள். தவத்தின் விளைவாக அப்புத்திரர்கள் பிறந்தமையால் அவர்கள் இருவரும் தவப்புதல்வர்களாக விளங்கினார்கள். அவர்களிருவரும் இராமனுக்கு மிக்காராக விளங்கினார்கள். தவத்தைக் கையாளுகின்ற பெற்றோர்களுக்குத்தான் தெய்வீக இயல்புகள் பொருந்திய புத்திரர்கள் பிறப்பார்கள்.

"தக்கார் தகவிலர் என்பது அவரவர் எச்சத்தால் காணப்படும்" என்பதில் எச்சம் என்பதற்குச் சந்தான விருத்தி என்றும் பொருள் கொள்ளலாம். தவ வாழ்வில் ஈடுபட்டிருப்பவர்களுக்குத்தான் சான்றோர்கள் பிள்ளைகளாகப் பிறக்கிறார்கள். சீதா ராமனுடைய ஜீவிதமும், ரிஷிகளுடைய ஜீவிதமும் இதற்கு எடுத்துக்காட்டுகளாக அமைகின்றன. தவ வாழ்வு மறைந்து வருவதால் இன்றைக்கு ஜனத்தொகை ஏராளமாகப் பெருகி வருகின்றது. ஜனத்தொகை பெருகுவதற்கிடையில் நல்லவர்களைக் காண்பதும் அரிதினும் அரிதாக இருக்கின்றது. இன்றைக்குக் காமத்தின் விளைவாகப் பிறக்கின்ற குழந்தைகள்தாம் ஏராளமாகக் காணப்படுகின்றனர். தவத்தின் விளைவாகத் தோன்றும் குழந்தைகள் அரிதிலும் அரிதாகப் போய்விட்டார்கள்.

பிரம்மச்சரிய விரதத்திற்கு மேலான விரதம் ஒன்றுமில்லை. பிரம்மச்சரியத்தின் மூலமாகப் பிரம்ம ஞானம் பெறலாம். உலகுக்குப் பிரம்மச்சரியத்தின் மூலமாகச் சற்புத்திரர்களைப் பெற்றெடுத்துத் தரலாம். ஆஞ்சநேயன் போன்றும் பீஷ்மர் போன்றும் உலக நன்மையின் பொருட்டுப் பிரம்மச்சரியத்தின் மூலம் செயற்கரிய செயல்கள் செய்து முடிக்கலாம். இம்மகாவிரதத்தை மனிதன் அனுஷ்டிப்பதற்குஉறுதியான தீர்மானம் செய்யவேண்டும். (தொடரும்

# துளசிதாசர் சரிதம்

இப்பொழுது டெல்லி நகரம் என்று அழைக்கப்படும் இடம் முன்பு அஸ்தினபுரம் என்று வழங்கியது. அஸ்தினபுரத்தில் ஓர் உத்தமர் வாழ்ந்து வந்தார். அவர் சாதுக்கள் சங்கத்தில் விருப்பம் கொண்டிருந்தார். வேதாந்த தத்துவத்தை மிகத் தெளிவாக அவர் அறிந்திருந்தார். எல்லா மதத்தினருக்கும் ஆத்மாவே உண்மைப் பொருள் என்பதனைப் புகட்டி வந்தார். அல்லாவாக இருப்பவரும், ஏசுவாக இருப்பவரும், அழியாத ஆத்மப் பொருளேயாகும் என்பதை முகம்மதியர்களுக்கும், கிறித்தவர்களுக்கும் உணர்த்தினர். ஆத்மாவே சிவம் ஆகும் என்றும், ஆத்மாவே விஷ்ணு ஆகும் என்றும் சைவர்களுக்கும், வைணவர்களுக்கும் எடுத்துப் புகட்டினர். அனைத்தும் ஆத்மசொரூபம் என்று இவர் கூறி வந்ததால் மக்கள் இவரை ஆத்மாராம் என்று அழைத்தார்கள்.

அக்காலத்தில் அஸ்தினபுரத்துக்கு அரசனாக இருந்தவர் அக்பர் ஆவார். ஆத்மாராமின் நற்குணத்தையும், கல்வித் திறத்தையும், சாதுரியத்தையும், ஞான முதிர்ச்சியையும் அறிந்த அக்பர் அவரைத் தம் முதலமைச்சராக்கிக்கொண்டார். ஆத்மாராம் என்பவருக்கு மகா உத்தமியான மனைவி வாய்த்திருந்ததால் அவ் உத்தமியோடு இல்லற வாழ்வைச் சிறப்பாக நடாத்தி வந்தார். அத்தம்பதிகளுக்கு அழகுடன் கூடிய ஒரு சற்புத்திரன் வாய்த்தான்.

ஆத்மாராம் தமக்கு வாய்த்த குழந்தையைப் பார்த்து ஆனந்தமடைந்தவராய் அக்குழந்தையை அன்புடன்வளர்த்து வந்தார். குழந்தைக்குத் துளசிதாசன் என்று பெயரிட்டுக் கல்விப் பருவம் வந்ததும் உபநயனமும் செய்து வைத்தார். நான்கு வேதங்களையும், ஆறு சாஸ்திரங்களையும், இதிகாச, வியாகரணங்களையும் தெளிவான முறையில் தம் மகனுக்குக் கற்பித்தார். துளசிதாசன் கல்வி கேள்விகளில் சிறந்தவனாக விளங்கினன். தக்க வயது வந்தவுடன் தம் குலத்தில் பிறந்த மமதாதேவி என்னும் கன்னிகையைத் துளசிதாசனுக்கு மணம் முடித்து வைத்தார். தம் மகனுக்கு அரச நீதிகளையும் எடுத்துரைத்தார். தம்மோடு அரசவைக்கு அழைத்துச் சென்று ஆங்குத் தாம் பார்த்த பணியில் அவருக்குத் தக்க பயிற்சியும் கொடுத்தார். ஆத்மாராம் தம் மகனுக்குப் புகட்டிய அறிவுரையாவது: "அரசனும் பாம்பும் ஒன்று என்று சொல்லப்படும். ஆகையால் அரசனிடம் மிகக் கவனத்துடன் நடந்து கொள்ளவேண்டும். அக்னியிடம் குளிர் காயும்பொழுது அக்னியோடு நம்மைச் சேர்த்துக்கொள்வதில்லை. அக்னியை வெறுத்துத் தூரப் போய்விடுவதுமில்லை. பொருத்தமான தூரத்தில் அக்னிக்குப் பக்கத்தில் அமர்ந்து குளிர் காய்கின்ருேம். அக்னியிடம் பழகுவதுபோன்று அரசனிடம் பழகவேண்டும். நீதியில் மனதை நிலைத்திருக்கச் செய்யவேண்டும். எளியோர் வலியோர் என்ற பாரபட்சத்தை ஒதுக்கிவிட்டு நியாயத்திற்குத் தீர்ப்பு வழங்கவேண்டும். நன்ருகச் சிந்தித்த பிறகே அரசனுடைய கேள்விக்கு விடைதரவேண்டும். மந்திரியாக இருப்பவர் நீதியுடன் இல்லாவிட்டால் அரசாங்கம் விரைவில் அழிந்துபோகும். நல்ல ஆட்சி ஏற்படுத்துவது மிகவும் கஷ்டம். ஆட்சியை அழிப்பது மிகவும் சுலபம். தன் உயிரைப்போல் மன்னுயிரையும் பாதுகாக்க வேண்டும். அரசன் அநீதி வழியில் செல்வானயின் திருஷ்டாந்தங்கள் மூலம் நீதி மார்க்கத்தில் அரசனைத் திருப்பவேண்டும். அதிகாரத்தில் இருக்கும்பொழுது அவ்வதிகாரத்தை நாட்டைச் சீர்ப்படுத்தவும், அறத்தை நிலைநாட்டவும் பயன்படுத்த வேண்டும். ஒரு நாடு பிரகாசிக்க வேண்டுமென்ருல் ஆங்குச் சான்ருேர்கள் போற்றப்படவேண்டும். சந்திர சூரியர்களால் நாடு பிரகாசிப்பதில்லை. சான்ருேர்களாலேயே நாடு பிரகாசமடைகின்றது. சான்ருேர்கள் இல்லாத நாடு கொடும் புலி வாழும் காடு என்றே சொல்லலாம். அமைச்சருக்குப் பொறுமையும் சூட்சும புத்தியும் இருக்க வேண்டும். 'பொறுமைகடலினும்பெரிதாகும்.' இந்த வாசகம் ஓர் அரசனைக் கொலை செய்யும் குற்றத்தினின்றும் தடுத்து நிறுத்தியது. இதனை விளக்க வரும் கதையைக் கேள்:

ஓர் ஊரில் ஒரு பெரியவர் இருந்தார். அவர்

இல்லற வாழ்வு வாழ்வதற்கு இடையில் யாண்டும் பிரம்ம நிஷ்டையில் இருந்தார். அவருடைய இறுதிக் காலத்தில் அவருடைய மகன் வினவியதாவது: "தந்தையே! எனக்காக நீங்கள் பைசாகூடச் சேர்த்து வைக்கவில்லை. நான் இனி எவ்வாறு வாழ முடியும்?" அதற்கு அவர் அளித்த பதிலாவது: "பொறுமை கடலினும் பெரிது என்று எழுதி உன் கையில் கொடுத்துள்ளதைப் பத்திரமாக வைத்திரு. உனக்குக் குறை ஏற்படுங்காலத்தில் இந்நாட்டு அரசனிடம் சென்று இதைக்கொடு. அப்பொழுது உன் குறை நீங்கும்.'' தந்தை காலமான பிறகு அவருக்குச் செய்யவேண்டிய ஈமக் கிரியைகளை எல்லாம் முடித்துவிட்டு அச் சீட்டை எடுத்துக்கொண்டு போய் அரசனிடம் கொடுத்தான். அரசன் அதை வாங்கிப் படித்துவிட்டுத் தன் ஆயுதங்கள் வைக்கும் உறை ஒன்றில் அதைச் சொருகினான். அந்த வாசகத்தைத் தந்தபெரியவரின் மைந்தனுக்கு வேண்டிய பணம் கொடுத்து அனுப்பினான்.

சில நாட்களுக்குப் பிறகு அரசன் வேட்டைக்காகக் காட்டுக்குச்சென்றான். அவன் வேட்டைக்குப் போயிருக்கும் சமயம் அரண்மனையில் அரசன் படுக்கையை அலங்கரிக்கும் வேலையாளுக்கு வெகுநாளாயிருந்த விருப்பத்தை நிறைவேற்றிக்கொள்ள வேண்டும் என்ற எண்ணம் வலுவடைந்தது. அரசனுடைய மலர்போன்ற படுக்கையின் மேல் படுத்து உறங்கவேண்டுமென்ற ஆசைஅவனுக்குவெகுநாட்களாகஇருந்தது. அவ்வாசையை நிறைவேற்றிக்கொள்ளும் வகையில் அப்பஞ்சுப்படுக்கையின்மேல் மிருதுவான பீதாம்பரத்தைப் போர்த்திக் கொண்டு படுத்தான். அவனுக்கு இன்பமாக இருந்தது. தன்னை மறந்து நன்றாகத் தூங்கி விட்டான்.

இரவு அரசனுடைய மனைவி அரசனுடைய படுக்கை அறைக்குச் சென்றபொழுது அரசன் நித்திரை செய்கிறாரென்று பக்கத்தில் தானும் படுத்து நித்திரை போய்விட்டாள். அன்றிரவே அரசன் காட்டிலிருந்து நாட்டுக்குத் திரும்பினான். அரண்மனைக்குள் புகுந்த அரசன் படுக்கை அறைக்குள்சென்றான். ஆங்கு இராணியும், ஓர் ஆடவனும் தம் படுக்கையின் மேல் படுத்துறங்குவதைப் பார்த்தான். அவன்கோபாவேசமடைந்தான். இவர்கள் இருவரையும் வெட்டித் துண்டுகளாக்குவதே சரியென்று ஆயுத உறையிலிருந்து ஆயுதத்தை உருவினான். ஆயுத உறையில் சொருகி வைத்திருந்த சீட்டு அப்பொழுது வெளியே விழுந்தது. ஆகாயத்திலிருந்து அந்தச் சீட்டை யாரோ போடுவதாக அரசன் உணர்ந்தான். அதை எடுத்துப்பார்த்த பொழுது 'பொறுமை கடலினும் பெரிது' என்று எழுதப்பட்டிருந்தது. அதைப் படித்ததும் தன் செயலை நிறுத்திவிட்டு அறையிலிருந்து வெளியேவந்து மந்திரியைஅழைத்துப்படுக்கையறையில் நிகழ்ந்ததையெல்லாம் மந்திரியிடம் கூறினான். "அரசே! உங்கள் ஐயம் நீங்குவதற்கு ஓர் உபாயம் செய்கின்றேன். நீங்கள் பள்ளி அறையின் கதவுப்பக்கம் வாயிலில் நில்லுங்கள்" என்றான். அரசனும் அவ்வாறே நின்றான். மந்திரி பள்ளியறையின் வாயிலில் நின்று மெதுவாய் இரண்டு கைகளையும் தட்டினான். கைகளைத் தட்டிய ஓசையைக் கேட்ட இராணி விழிப்படைந்தாள். உடனே அவள் மந்திரியைப் பார்த்து "அரசனும் நானும் உறங்கிக் கொண்டிருக்கும் அறைக்குள் நீர் அச்சமின்றி வரலாமா? நல்லவர்க்கு இது அழகா?" என்று அடங்கிய குரலில் கூறிவிட்டு வேகமாகத் தன் அறைக்குள் சென்று விட்டாள். மந்திரி அவள் பின் சென்று ''காட்டுக்குப்போன அரசன் அரண்மனைக்கு எப்பொழுது வந்தார் என்பதைச் சொல்லுங்கள்'' என்று இராணியைக் கேட்டான். "அரசன் முதல் யாமத்திலேயே வந்து படுத்துக்கொண்டார்" என்றாள். "அரசன் வந்ததை நீங்கள் பார்த்தீர்களா?" என்று மந்திரி கேட்டான். ''அவர் வந்ததை நான் அறியேன். எவ்வழியாகவோ அரண்மனைக்குள் வந்து காட்டுக்குப்போன ஆயாசத்தில் படுக்கையில் படுத்துத் தூங்கிக்கொண்டிருக்கிறார். நீ விவேகியாக இருந்தும் அந்தப்புரத்துக்கு வந்ததுமன்றி மேலும் கேள்விகளைக் கேட்கின்றாய். எவ்வளவு அவசரமான காரியமாக இருந்தாலும் நீ தனித்து அந்தப்புரத்துக்குள் வரக்கூடாது" என்றாள் அரசி.

அதன் பிறகு மந்திரி அரசனுடைய படுக்கை அறைக்குச் சென்று ஆங்குத் தூங்கிக்கொண்டிருந்த வேலையாளைத் தட்டி எழுப்பினான். அவன் எழுந்ததும் பக்கத்தில் மந்திரி நின்றுகொண்டிருப்பதைப் பார்த்து நடுநடுங்கினான்.

"உன் பக்கத்தில் படுத்திருந்தது யார்? உண்மையைச் சொல்!" என்று அச்சுறுத்தினன். "நான் ஒருவனே உறங்கினேன். வேறு யாரும் என்பக்கத்தில் படுக்கவில்லை" என்று நடுநடுங்கிக்கொண்டே கூறினன். "அரசனுடைய படுக்கையில் நீ எதற்காகப் படுத்தாய்?" என்று மந்திரி கேட்டான். "நெடுநாளாக அரசனுடைய படுக்கையில் படுத்துப் பார்க்கவேண்டும் என்ற ஆசை எனக்கு இருந்தது. அந்த ஆசையை நிறைவேற்றிக்கொள்ளப் படுத்தேன்" என்ருன். மந்திரி அவனைக் காவலில் வைத்துவிட்டு, "இப்பொழுது உங்களுக்குச் சந்தேகம் நீங்கிவிட்டதா?" என்று அரசனைக் கேட்டான். "இன்னும் எனக்கு ஐயம் நீங்கவில்லை" என்று கூறி இராணியை அழைத்து வரச் சொன்னன். இராணியிடம் அரசன் பகர்ந்ததாவது: "நீ வேலையாளுடன் படுத்துத் தூங்கிக்கொண்டிருந்தாய். உன் தூய்மையை நிரூபிக்கக் கொதிக்கும் எண்ணெய்க் கொப்பரையில் நீ குளித்துவரவேண்டும். நீ அப்படிச் செய்தால் என்னுடன் வாழலாம். அதற்குச் சம்மதம் இல்லையெனில் உன் தந்தையின் விட்டுக்குச் செல்லலாம்." இராணி அக்கணமே எண்ணெயைக் கொதிக்க வைத்து அதில் குதிக்கஆயத்தமாக இருந்தாள். இராணியிடமிருந்த உறுதிப்பாட்டை அறிந்த அரசன், "உன் பேரில் குற்றமில்லை. நீ எண்ணெய்க் கொப்பரையில் குதிக்க வேண்டாம்" என்று கூறினன். "அரசே! உங்களுக்கு எப்பொழுது சந்தேகம் வந்ததோ அந்தச் சந்தேகத்தோடு என்னைத் தொடவேண்டாம்" என்று கூறி எண்ணெய்க் கொப்பரையில் பாய்வதற்கு ஆயத்தமானள். இராணியை அதில் பாயவொட்டாமல் தடுத்து நிறுத்தும்படி தோழிகளுக்கு அரசன் உத்தரவிட்டான். அரசன் "தெய்வ கடாக்ஷத்தால் விழுந்த இந்தச் சீட்டை எண்ணெய்க் கொப்பரையில் போட்டுப் பரிசோதிக்கிறேன்" என்று கூறினன். அப்பொழுது மந்திரி பகர்ந்ததாவது: "அரசே, அந்தச் சீட்டு ஒரு பெரியவரின் மகன் உமக்குக் கொடுத்ததாகும். அவன் கொடுத்தபொழுது அதை வாங்கி நீர் வாள் சொருகும் உறையில் சொருகிவைத்தீர். வாளை உருவும்பொழுதுஅது கீழே விழுந்தது.பொறுமை கடலினும் பெரிது. இராணி கற்பழியாத உத்தமி. இவ்விரண்டும் சத்தியமானல் இச்சீட்டு எண்ணெய்க்கொப்பரையில் போட்டபடியே இருக்கவேண்டும் என்று உங்கள் இஷ்ட தெய்வத்தை நினைத்து அதில் போடுங்கள்." அரசனும் அவ்வாறே செய்ய அச்சீட்டு கொதிக்கும் எண்ணெய்க் கொப்பரையில் சிறிதும் பழுதாகாமல் மிதந்து கொண்டிருந்தது. எல்லாரும் இவ்வதிசயத்தைப் பார்த்து வியப்படைந்தார்கள். அரசனுடைய தேவி, "அச்சீட்டு கொப்பரையில் மிதந்துகொண்டிருப்பதால் நான் எப்படிப் பரிசுத்தமானவள் ஆவேன்? என் தூய்மையை விளக்குவதற்கு அதுபோதாது"என்று கூறிக்கொண்டே எண்ணெய்க் கொப்பரைக்குள் பாய்ந்தாள். கொதித்த எண்ணெய் பனிநீர் போல் குளிர்ச்சி அடைந்தது. தேவியும் முகமலர்ச்சியோடு அதிலிருந்து எழுந்து வந்தாள். அரசன் தன் மனைவியைக் கட்டி அணைத்துக்கொண்டு பகர்ந்ததாவது: "உன்போன்ற உத்தமிகள் உலகில் இருப்பதால்தான் பருவகாலம் தவருமல் மழை பொழிந்துகொண்டிருக்கிறது. இயற்கையில் யாவும்ஒழுங்காகநிகழ்ந்துகொண்டிருக்கின்றன."பிறகுமந்திரியைநோக்கி அரசன் பகர்ந்ததாவது: "அமைச்சனே! உன்னுடைய யுக்தியை மிகவும்பாராட்டுகின்றேன். நீ உன் யுக்தியை இப்பொழுது கையாளாமல் இருந்திருந்தால்நான் இப்பத்தினியை வாளுக்கு இரையாக்கியிருப்பேன்." "பொறுமை கடலினும்பெரிது" என்று எழுதிய சீட்டைத் தனக்குத் தந்த பெரியவரின் குமாரனை அழைத்து நிறையச் சன்மானம் வழங்கினன். இப்படிப் பல நீதிக்கதைகளைத் துளசிதாசருக்குத் தந்தை ஆத்மாராம் எடுத்துக் கூறினர். தம் மகனைத் தாம் பார்த்துவந்த பணியில் அமர்த்திவிட்டுச் சாதுக்களுடன் சேர்ந்து ஆத்மாராம் தீர்த்த யாத்திரை புறப்பட்டார்.

துளசிதாசர் அக்பரிடம் அத்யந்த பக்தியுடன் இருந்தார். அரசனுடைய அன்பையும் பெற்ருர். அன்னச் சத்திரங்கள், விசாலமான குளங்கள், கோயில்கள், சாதுக்கள் தங்குவதற்கு மடங்கள் முதலியன கட்டினர். தந்தையைக் காட்டிலும் சமர்த்தராக அக்பரின் சம்மதத்துடன் ஆட்சிப் பொறுப்பைத் திறமையாக நிறைவேற்றினர். (தொடரும்)

# ஸத் ஸம்பாஷணை

**கேள்வி : (361)** இல்லறத்திலிருந்து பின்னர் துறவறம் மேற்கொள்வது நல்லதா?

பண்பட்ட மானுட வாழ்க்கையானது நான்கு ஆச்ரமங்களாகப் பிரித்து வைக்கப்பட்டிருக்கிறது. அவையாவன: பிரம்மச்சரிய ஆச்ரமம், கிருஹஸ்த ஆச்ரமம், வானப்பிரஸ்த ஆச்ரமம், சந்நியாச ஆச்ரமம் என்பனவாம். இந்த நான்கனுள் பிரம்மச்சரிய ஆச்ரமத்தில் சீரிய வாழ்க்கை முறை துவங்குகிறது. பிரம்மச்சரிய ஆச்ரமம் பூர்த்தியாவதற்கு முன்பே ஒரு சிலருக்கு இந்நிலவுலக வாழ்க்கை நிலையற்றது என்பதும் துன்பம் நிறைந்தது என்பதும் தெற்றென விளங்குகிறது. ஆகவே அரிதிலும் அரிதாக ஒரு சிலர் பிரம்மச்சரிய ஆச்ரமத்திலிருந்து நேர் சந்நியாச ஆச்ரமத்துக்குப் போகிறார்கள். அக்காலத்தில் வாழ்ந்திருந்த ஆதிசங்கரரும் இக்காலத்தில் வாழ்ந்து வந்த சுவாமி விவேகானந்தரும் இதற்குச் சான்றுகளாவார்கள்.

சமுதாயத்தில் உள்ள மக்களில் பெரும்பான்மையோர் முறைப்படி பிரம்மச்சரிய ஆச்ரமத்தினின்று கிருஹஸ்த ஆச்ரமத்துக்கு வருகிறார்கள். இந்த ஆச்ரமத்தில் அவர்கள் வாழ்வாங்கு வாழ்ந்திருந்து இல்லறக் கடமைகளை நன்கு நிறைவேற்றுகின்றனர். அதற்கிடையில் இவ்வுலக வாழ்விலுள்ள இன்பதுன்பங்களின் பாங்குகளை அவர்கள் நன்கு அறிய வருகிறார்கள். மேற்கொண்டு பிறவி வேண்டாம் என்னும் வைராக்கியம் வாய்க்கப் பெற்றவர்கள் வானப்பிரஸ்த ஆச்ரமத்தின் வாயிலாகவோ நேரே கிருஹஸ்த ஆச்ரமத்தினின்றோ சந்நியாச ஆச்ரமத்துக்குப் போகிறார்கள். அப்படி அவர்கள் செல்வதையும் ஆன்றோர்கள் ஆமோதிக்கிறார்கள். ஆகவே துறவறத்தை மேற்கொள்வது பிறப்பு வேண்டாம் என்பவர்களுக்கு முற்றிலும் அவசியம். அந்த அவசியத்தை இல்லறத்தினின்று அறிந்துகொண்ட பிறகு சந்நியாச ஆச்ரமத்துக்குப் போவது முற்றிலும் பொருத்தமானதே.

**கேள்வி : (362)** நாள்தோறும் வாழ்வாங்கு வாழ முயற்சி செய்கிறோம். அன்போடு வாழ்வைத் துவக்கினாலும் கோபம் வருகின்றது. இதன் காரணம் என்ன?

வாழ்வாங்கு வாழ்ந்து வருவதாலேயே கோபம் வராது என்று உறுதிகூற முடியாது. அன்போடு வாழ்கின்றவர்களுக்கும் சிலவேளைகளில் அடங்காத கோபம் வருகிறது. இதற்குச் சான்று ஒன்று எடுத்துக்கொள்ளவேண்டும். தாய் ஒருத்தி தான் பெற்றெடுத்த குழந்தையை அன்போடு வளர்த்து வருகிறாள். ஆயினும் சிலவேளைகளில் அக்குழந்தையை அவள் சினந்துகொள்கிறாள். அக்குழந்தையை அவள் அடிக்கவும் செய்கின்றாள். அக்குழந்தைக்கு அன்போடு கழுத்தில் தங்கச் சங்கிலி ஒன்றை அவள் அணிவிக்கிறாள். அந்தத் தங்கச்சங்கிலி உடலிலிருப்பதைக் குழந்தை ஆமோதிப்பதில்லை. கழுத்தினின்று அதைக் கழற்றி எடுத்து அது தூர வீசிப் போடுகிறது. அதைப் பார்த்த தாய்க்குக் கோபம் வருகிறது. குழந்தையின் கன்னத்தில் இரண்டு அறை அறைகின்றாள். குழந்தையின் கழுத்தில் மீண்டும் அந்தச் சங்கிலியை எடுத்து மாட்டுகிறாள். அடிபொறுக்கமாட்டாத குழந்தைக்கு அச்சங்கிலியின்மீது விருப்பம் இல்லாவிட்டாலும் அடிக்குப் பயந்துகொண்டு அதைப் போட்டுப் பழகுகிறது.

குழந்தையை அன்போடு வளர்க்கிற தாய் ஏன் அதை அடித்தாள் என்னும் கேள்வி வருகிறது. இக்கேள்விக்குப் பொருத்தமான விடை ஒருகோட்பாட்டில் அடங்கியிருக்கிறது. தடைப்பட்ட ஆசை கோபமாக வடிவெடுக்கிறது. குழந்தைக்குத் தங்கச் சங்கிலி போட்டுப்பார்க்கவேண்டும் என்பது தாயின் ஆசை. அத்தகைய ஆசை குழந்தைக்கு இல்லை. ஆயினும் தாய் பூண்டிருந்த ஆசைக்கு அது பங்கம் பண்ணியதால் அது அடியுண்டது; துன்பத்துக்காளானது. எனவே எங்கெல்லாம் ஆசைக்குத் தடை வருகிறதோ அங்கு அது சினமாக வடிவெடுக்கிறது. சினம் பொல்லாதது. ஆசைக்கு அடிமையாய் இருப்பவர்கள் எல்லாரும் சினத்துக்கு ஆளாவார்கள். ஆசையை வென்றவர்களே கோபத்தையும வெல்ல வல்லவர்களாகிறார்கள்.

கேள்வி: (363) ஆன்மிக வாழ்க்கையில் ஒன்றும் தெரியாதிருப்பதும் ஞானம். எல்லாம் தெரிந்திருப்பதும் ஞானம். விளக்கம் தேவை.

இக்கேள்விக்கு விடையாக முதலில் சான்று ஒன்று எடுத்துக்கொள்வோம். ஒரு புத்தகத்தில் என்ன எழுதப்பட்டிருக்கிறது என்பதைக் காரிருளில் படிக்கமுடியாது. அதே விஷயத்தை நண்பகல் சூரியப் பிரகாசத்திலும் படிக்க முடியாது. ஏனென்றால் காரிருளிலோ மிகப் பிரகாசமான வெளிச்சத்திலோ கண் வேலை செய்யாது. கண் வேலை செய்யாதிருப்பது விளைவு. அதற்குக் காரணமாய் இருப்பவை முரண்படுகிற இரண்டு சூழ்நிலைகள். ஒன்று மிகைப்பட்ட வெளிச்சம்; மற்றது மிகைப்பட்ட இருள். இந்த நெருக்கடியை முன்னிட்டுக் கண் தெரியாமைக்குக் காரணமாயிருக்கின்ற இருளையும் வெளிச்சத்தையும் ஒரே பாங்குடையவைகள் என்று நாம் முடிவுகட்டலாகாது. அவை இரண்டும் அறவே ஒன்றோடொன்று முரண்பட்டிருக்கின்றன.

இனி, இக்கேள்வியில் எடுத்துக்கொண்ட விஷயத்திற்கு மற்றொரு சான்று சொல்லவேண்டும். குழந்தை ஒன்று மனதற்ற நிலையிலிருக்கிறது. ஆதலால் அக்குழந்தையிடம் தெய்விகச் சான்னித்தியத்தைத் தெளிவுற நாம் காண்கிறோம். ஆனால் அது தெய்விகச் சான்னித்தியம் என்பது அக்குழந்தைக்குத் தெரியாது. இனி, சான்றோர் ஒருவரின் பாங்கை ஆராய்வோம். மனதற்ற நிலையில் இருப்பவர் சான்றோர். அதன் விளைவாக அவரிடம் தெய்விகம் வெளிப்படையாகத் திகழ்கிறது. அந்தத் தெய்விகத்திலேயே அச்சான்றோர் திளைத்திருக்கிறார். இதுவே சான்றோருக்கும் குழந்தைக்கும் இடையில் உள்ள வித்தியாசம். மனதற்ற நிலை இருவருக்கும் பொதுவானது. ஆயினும் அந்நிலையில் திகழ்கிற தெய்விகத்தைக் குழந்தை அறியாது; சான்றோர் அறிகிறார்.

ஆகவே இக்கேள்வியில் கேட்டுள்ள தெரியாத நிலையும் தெரிந்த நிலையும் ஒன்றாகத் தென்படினும் வெளிச்சமும் இருளும் போன்றவை ஞானியின் நிலையும் குழந்தையின் நிலையும். மனதற்ற நிலை குழந்தைக்கும் ஞானிக்கும் பொது. ஆனால் பரிபாகத்தில் குழந்தையினிடம் இன்னும் மனது வடிவெடுக்கவில்லை. ஆனால் சான்றோரோ வடிவெடுத்து வந்துள்ள மனதைத் தாண்டி மேல்நிலைக்குப் போயுள்ளார்.

கேள்வி: (364) புண்ணியம் செய்பவர்களுக்கு மறுபிறப்பு இல்லை. பாபம் செய்கிறவர்களுக்கு மறுபிறவி உண்டு. ஏழு பிறவிகள் என்பன சரியா?

புண்ணியம் செய்கிறவர்களுக்கு மறுபிறப்பு இல்லை என்பது உண்மையன்று. அவர்களுக்கும் மறுபிறப்பு உண்டு. ஆயினும் புண்ணியம் செய்கிறவர்களுக்கு மேலும் மேலும் தொடர்ந்து வருகிற பிறவிகள் நல்லவைகளாகவும் இன்பத்தில் ஊறியவைகளாகவும் இருக்கின்றன. இதற்கு மாறாகப் பாபம் செய்பவர்களுடைய பிறவிகள் கீழானவைகளாகவும் துன்பத்தில் உழல்பவைகளாகவும் இருக்கின்றன. பாப புண்ணியமாகிய இரண்டுவித வினைகளைச் செய்து கொண்டிருப்பவர்களுக்குப் பிறவிகளும் தொடர்ந்து வந்து கொண்டேயிருக்கின்றன. பிறவிப் பெருங்கடலைக் கடக்க முயலுகிறவர்கள் இரண்டுவித வினைகளையும் தாண்டி அப்பால் செல்லக் கடமைப்பட்டிருக்கின்றனர். இக்கோட்பாட்டை அனுசரித்தே 'இருள்சேர் இருவினையும் சேரா இறைவன் பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு' என்னும் கோட்பாடு வந்துள்ளது.

பரிணமித்து வருகிற உயிர்கள் படிப்படியாக எடுக்கிற பிறவிகள் எண்ணிக்கையிலடங்கா. கோடிக்கணக்கில் அவைகள் விரிந்துகொண்டு போகின்றன. ஆயினும் அவையாவும் ஏழுவித ஞான பூமிகளில் அடங்கியுள்ளன. ஒரு வகுப்பில் படிக்கும் மாணக்கன் அந்த வருஷம் முழுதும் அல்லது அவன் மந்தமாயிருக்கும் சில வேளைகளில் ஒரு வருஷமோ அதற்கு மேற்பட்ட காலமோ அதே வகுப்பில் படிக்கிறான். அந்தப் பாங்கில் ஒரு ஞான பூமியில் பரிபாகம் அடையும் வரையில் பிறவிகளைக் கணக்கற்றவாறு ஒரு ஜீவன் எடுத்து வருகிறான். ஆக எழுமை என்று சொல்லுவதும் ஏழு பிறப்பு என்று சொல்லுவதும் ஏழு ஞான பூமிகளைக் குறிக்கின்றன. எடுக்கின்ற சரீரங்களின் எண்ணிக்கை கணக்கில் அடங்காதவை. மனம் அடைந்து வருகிற பரிபாக நிலையைத் தான் ஏழு பிறப்பு என்கின்றோம்.

# ஆத்ம போதம்

( திரு. V. S. நரசிம்மன் )

अखण्डानन्द रूपस्य तस्यानन्द लवाश्रिताः ।
ब्रह्माद्यास्तारतम्येन भवन्त्यानन्दिनोऽखिलाः ॥

अखण्ड आनन्द रूपस्य तस्य (அகண்ட ஆநந்த ரூபஸ்ய தஸ்ய) எல்லையற்ற பேரானந்த வடிவாகிய பிரம்மத்தினுடைய आनन्द लव (ஆநந்த லவ)சிறுதுளி ஆனந்தத்தை आश्रिताः (ஆச்ரிதா.) பெற்று, तारतम्येन (தாரதம்யேந) பல ஏற்றத் தாழ்வுகளுடன் ब्रह्म आद्याः (பிரம்மா ஆத்யா:) பிரம்மா முதலியோர் अखिला आनन्दिनः (அகிலா: ஆநந்தின:) முழு ஆனந்தம் அடைந்தவர்களாக भवन्ति (பவந்தி) இருக்கின்றனர்.

பேரானந்த வடிவாகிய பிரம்மானந்தத்தின் ஒரு துளியைப் பெற்று, பிரம்மா முதலியோர் பல ஏற்றத்தாழ்வுகளில் முழு ஆனந்தம் பெற்றவர்களாகத் திகழ்கின்றனர்.

பரம்பொருள் ஆனந்த வடிவம். ஜீவனின் நிஜ சொரூபமும் அத்தகையதே. அவனும் ஆனந்தத்தை விரும்புகிறான். 'கோ ஹ்யேவ அன்யாத் க: ப்ராண்யாத் யதேஷ ஆகாச ஆனந்தோ ந ஸ்யாத்? ஏஷ ஹ்யேவ ஆநந்தயாதி—' (தைத்திரீய உபநிஷதம்) "இந்த ஆனந்தம் இல்லாவிடின் யார் செயல்களைச் செய்யவோ, உயிர் வாழவோ முடியும்? உலகிற்கு இன்பம் தருவது இதுவேயன்றோ?" அதே உபநிஷதம் ஆனந்தத்தின் அளவை வர்ணிக்கின்றது. 'ஒரு மனிதனின் ஆனந்தம்' என்று வரையறுத்து, 100-ன் அடுக்காகத் தொடர்கின்றது. ஸாதுவாக, யௌவனம் நிரம்பி, நன்கு கற்று, ஏவல் திறமை, திட சித்தம், உடல் வன்மை பெற்று, எல்லாச் செல்வங்களும் நிறைந்த பூமியின் தனிப்பெரும் உடைமையாளனாக இருப்பவனின் ஆனந்தமே 'ஒரு மனித ஆனந்தம்'. இதை அடிப்படை அலகாகக் கொண்டு நூறு மடங்கு செய்தால் மனித கந்தர்வனின் ஆனந்தம் ஆகும். இங்ஙனம் விவரித்து இறுதியில் பிரம்மானந்தத்தின் அளவு என்ன என்று ஆராய்ந்தால் $10^{20}$ (ஒன்று என்னும் எண்ணிற்குப் பின் இருபது பூஜ்யம்) மனித ஆனந்தத்தின் அளவு ஆகின்றது. எனவே மனிதர்கள், தேவர்கள், பித்ருதேவதைகள் பிரம்மா ஆகியோரின் ஆனந்தம் அதில் ஒரு திவலையே (லவம்) என்பது உண்மை தானே! 'தாரதம்யேந' இவர்களுக்கு இடையே ஆனந்தத்தில் தராதரம், வேறுபாடு உள்ளது என்பது உபநிஷத் தரும் பட்டியலால் புலப்படும்.

பிருஹத் ஆரண்ய உபநிஷதமும் இதே கருத்தைத் தெரிவிக்கின்றது. "ஏதஸ்யைவான் ஆநந்தஸ்ய அன்யானி பூதாநி மாத்ராம் உபஜீவந்தி—இந்த ஆனந்தத்தின் சிறு பகுதியைப் பெற்று ஜீவர்கள் உயிர் வாழ்கின்றனர்."

"பரிபூரணப் பிரம்மானந்தம் என்னும்சாகரத்தில் அலைகள் எழுந்தன. அப்போது காற்று அடித்து ஆனந்தத் திவலை ஒன்றைச் சுகர் ருசித்தார். அவர் மனம் உடனே அதீதத்தில் ஆழ்ந்தது. நாரத முனிவரோ ஏழு எட்டுத் துளிகளைப் பருகி ஆனந்த வடிவில் திகழ்ந்தார்" என்று பரமஹம்ஸர் இதே தத்துவத்தை எளிய மொழியில் விளக்குகின்றார்.

तद्युक्तमखिलं वस्तु व्यवहारस्तदन्वितः ।
तस्मा सर्वगतं ब्रह्म क्षीरे सर्पिरिवाखिले ॥

अखिलं वस्तु (அகிலம் வஸ்து) பொருள் அனைத்தும் तत् युक्तं (தத் யுக்தம்) அதனுடன் கூடியது; व्यवहारः(வ்யவஹார:) உலகச் செயல்கள் அனைத்தும் तत् अन्वितः ( தத் அந்வித: ) அதனுடன் சேர்ந்தவை. तस्मात् ( தஸ்மாத் ) ஆகவே क्षीरे (க்ஷீரே) பாலில் सर्पिः इव (ஸர்பி: இவ) நெய்யைப்போல் अखिले (அகிலே) எல்லாவற்றிலும் ब्रह्म (ப்ரஹ்ம) பிரம்மம் सर्वगतं (ஸர்வகதம்) எங்கும் நிறைந்தது.

"பொருள் அதனுடன் கூடியது; வ்யவஹாரம் அதனுடன் இணைந்தது. பாலில் நெய் போன்று பிரம்மம் எங்கும் நிறைந்துள்ளது."

'ஒவ்வொரு பொருளிடத்தும் ஐந்து அம்சங்கள் உள்ளன. அஸ்தி, பாதி, பிரியம், நாம, ரூபம் என்னும் இவற்றில் முதல் மூன்றும் பிரம்ம சொரூபம், கடைசி இரண்டும் மாயா சொரூபம்' என்று உரைக்கப்படும். அஸ்தி, இருப்பு, சத்; பாதி, ஒளிர்வது, சித்; பிரியம், இன்பமாக உள்ளது, ஆனந்த வடிவாகும். வியவஹாரம் அனைத்திலும் வேறுபாடு தோன்றக் காரணமானவை நாம, ரூபங்களே; முதல் மூன்று அம்

சங்கள் இல்லாத பொருளோ, வியவஹாரமோ கிடையாது. 'பார்க்கும் இடம் எங்குமொரு நீக்கமற நிறைகின்ற பரிபூரண ஆனந்தமே' (தாயுமானவர்); ஈசா வாஸ்யம் இதம் ஸர்வம் யத்கிஞ்ச ஜகத்யாம் ஜகத் — உலகில் உள்ள எந்தச் சிறு வஸ்துவானாலும் இறைவனால் நிறைக்கப்பட்டுள்ளது (ஈசாவாஸ்ய உபநிஷத்).

இறைவன் உள்ளும், புறமும் நிறைந்துள்ளான். 'பாலில் நெய் பரவிக் கிடப்பது போல்' என்பது உவமை. இந்த உண்மை ஊனக் கண்ணுக்குப் புலப்படாதது. அதுபோன்று இறைவனின் இருப்பை (சாந்நித்தியம்) ஊனக் கண்ணால், பொறிகளால் உணர முடியாது. பாலைத் தயிராக்கி, கடைந்து, வெண்ணெய் எடுத்து உருக்கினால் நெய் கிடைக்கும். அதுபோன்று ஆத்மசாதனையில் மனதை மாற்றி, விசாரத்தால் கடைந்து, ஆன்ம அநுபவம் என்னும் வெண்ணெய் எடுத்துத் தவத்தினால் தன்னையே உருக்கிக்கொண்டால் பிரம்ம நெய்யைப் பெறலாம். சிறிதும் இடைவெளி இன்றி உலகுடன் ஒன்றிணைந்து இருப்பது பிரம்மம். அந்தக் கருத்தை உவமை அழகாக விளக்குகின்றது. 'விறகில் தீயினன், பாலில் படு நெய்போல்' என்னும் வர்ணனையையும் ஒப்பிடல் வேண்டும்.

अनण्वस्थूलं ह्रस्वमदीर्घमजमव्ययम् ।
अरूपगुणवर्णाख्यं तद्ब्रह्मेत्यवधारयेत् ॥

अनणु (அநணு) அணுவற்றது; अस्थूलं (அஸ்தூலம்) பருமனற்றது, अह्रस्वं (அஹ்ரஸ்வம்) குட்டையானதன்று, अदीर्घं (அதீர்கம்) நீளமானது அன்று अज (அஜம்) பிறப்பற்றது, अव्ययम् (அவ்யயம்) அழிவற்றது. अरूपं (அரூபம்) உருவமற்றது, गुण वर्णाख्यं (குண வர்ணாக்யம்) குணம், நிறம், பெயர் (இல்லாதது). [यत् (யத்) எதுவோ] तत् (தத்) அது ब्रह्म इति (ப்ரஹ்ம இதி) பரம்பொருள் என்று अवधारयेत् (அவதாரயேத்) உறுதியாக அறிவாய்.

பரப்பிரம்மம் சிறியதன்று, பருமன் அன்று, குட்டையுமன்று, நீளமுமன்று, பிறப்பற்றது, அழிவற்றது, உருவம், குணம், நிறம், பெயர் எதுவுமற்றது அதைப் பிரம்மம் என்று உறுதியாக அறிவாய்.

ஐம்பொறிகளின் துணைகொண்டு பரம்பொருளை அறிய முடியாது. மனதிற்கும், வாக்கிற்கும் அது எட்டாதது. எனவே சுருதி மொழிகள் பலவிதமாக வர்ணனைகளை, லக்ஷணங்களை எடுத்து விளக்கினாலும், இவ்வடிவினன், இவ்வண்ணத்தன், இவன் இறைவன் என்று எழுதிக் காட்டொணாதே என்றே முடிக்கின்றன. எந்த ஒரு குணமும், வர்ணனையும் அதற்கு எல்லை கட்டுவதாகவே அமையும். (Every positive attribute puts a metaphysical limit to the Unlimited, binds the Unbounded). எனவே பிரம்மத்தின் நிர்க்குண சொருபத்தைச் சுட்டிக் காட்ட நிஷேத முறையில், இது அன்று என்று தள்ளும் முறையில் மேலே குறிப்பிட்ட வர்ணனைகள் அமைகின்றன. ஈஸ்வர சந்திர வித்யாசாகரைக் காணப் பரமஹம்ஸர் சென்றார். 'உலகில் உள்ள எல்லாம் வர்ணனைக்குள் அடக்கப்படும். நாவினால் அளக்கப்படாதது பிரம்மம் ஒன்றே. எனவே உச்சிஷ்டமாகாத—எச்சில் படாத—பொருள் பிரம்மம் ஒன்றுதான்' என்று பகர்ந்தார். அதைக் கேட்ட வித்தியாசாகர் பரவசமடைந்து, 'ஆகா! என்ன அற்புத மொழி. உபநிஷத் கருத்திற்கு ஒப்ப அன்றோ மொழிகின்றார்' என்று வியந்து பாராட்டினர்.

இந்தச் சுலோகம் ப்ருஹதாரண்யக உபநிஷத் மேற்கோளை ஒட்டி அமைவதைக் காணலாம். (III, viii, 8).

"கார்க்கி, இந்தப் பரம்பொருளை அக்ஷரம் என்று ஞானிகள் உரைக்கின்றனர். அஸ்தூலம், அநணு, அஹ்ரஸ்வம். அதீர்க்கம், அலோஹிதம், அஸ்நேஹம் (ஈரப்பசையற்றது). அச்சாயம் (நிழல் அன்று); அதமோ, அவாயம், அநாகாசம், அஸங்கம், அரஸம், அகந்தம், அசக்ஷுஷ்கம் (கண்ணால் அறியப் படாதது), அச்ரோத்ரம் அவாக், அமனோ, அதேஜஸ்கம், அப்ராணம், அமுகம், அமாத்ரம் (அளவு அற்றது), அநந்தரம், அபாஹ்யம்..." என்று அடுக்கடுக்காக எதிர்மறை வர்ணனைகளைப் பயன்படுத்துகின்றார். இறுதியில் 'அது எதையும் உண்பதில்லை; எதனாலும் உண்ணப் படுவதில்லை' என்று முடிக்கின்றார். "எவன் ஒருவன் இந்தப் பரம்பொருளை அறியாது இந்த உலகைவிட்டு நீங்குகின்றானோ அவன் அற்பமானவன்." 'நாம் பிறவி எடுத்ததன் லட்சியம் இறைவனை அறிவதற்காகவே' என்று பரமஹம்ஸரும் உபதேசம் செய்கின்றார்.

# தானம்

(சுவாமி அசலானந்தர்)

தானம் என்பது பிறர்க்கு ஒருவர் தம்மிடத்துள்ள பொருளைக் கொடுத்தலாகும். தானம் என்னும் இச்செயலை எப்படிச் செய்யவேண்டும் என்பதைத் தைத்திரீயோபநிஷதம் கட்டளையிடுவதாவது:

श्रद्धया देयम्। अश्रद्धयाऽदेयम्। श्रिया देयम्।
ह्रिया देयम्। भिया देयम्। संविदा देयम्।

ச்ரத்தயா தேயம் அச்ரத்தயாऽதேயம் ச்ரியா தேயம்
ஹ்ரியாதேயம் பியாதேயம் ஸம்விதாதேயம்
— தைத்ரீ. 11-3.

சிரத்தையுடன் கொடுக்கப்படவேண்டும்; அசிரத்தையுடன் கொடுக்கலாகாது. தேவையை அனுசரித்துக் (தாராளமாக) கொடுக்கப்படவேண்டும். (அதிகம் கொடுப்பதற்கில்லையே என்று) வெட்கத்துடன் கொடுக்கப்படவேண்டும். (கொடுக்கத்தக்க இடத்தில் கொடாமலிருப்பது தவறு என்னும்) அச்சத்துடன் கொடுக்கப்படவேண்டும். நல்ல எண்ணத்துடன் (பாத்திரம் அறிந்து) கொடுக்கப்படவேண்டும்.

அசிரத்தையுடன் கொடுக்கப்படும் தானத்தை அஸத் கர்மம், பொருந்தாத, முறை தவறிய செயலாகக் கீதை குறிப்பிடுவதோடு அமையாமல், அஃது இம்மைக்கும் உதவாது, மறுமைக்கும் உதவாது என்கிறது.

अश्रद्धया हुतं दत्तं तपस्तप्तं कृतं च यत्।
असदित्युच्यते पार्थ न च तत्प्रेत्य नो इह ॥

அச்ரத்தயா ஹுதம் தத்தம் தபஸ்தப்தம் க்ருதம் ச யத்
அஸதித்யுச்யதே பார்த்த ந ச தத்ப்ரேத்ய நோ இஹ

சிரத்தையின்றிச் செய்யும் யாகமும் தானமும் தபசும் மற்றக் கர்மமும் "அஸத்" எனப்படும். அர்ஜுனா, அது மறுமைக்கும் உதவாது, இம்மைக்கும் உதவாது.

கடோபநிஷத்தில், நசிகேதஸின் தந்தையான வாஜசிரவஸ் தானத்தைச் சிரத்தையின்றிச் செய்தார். உதாசீனமாகத் தானம் ஏற்பவரை மதியாது, வறட்டுப் பசுக்களையும் கிழட்டுப் பசுக்களையும் கொடுத்ததாகக் காண்கிறோம். இச்செயலானது விவேகம் படைத்த நசிகேதஸின் மனதை வெகுவாகத் தொடுகிறது. அவன் இச்செயலை நிராகரிக்கிறான். அசிரத்தையோடு கொடுக்கப்படும் தானத்தால் ஒருவன் ஆனந்தமற்ற உலகங்கள் எவைகளோ, அவைகளையே அடைவான் எனத் தீர்மானிக்கிறான்:

अनन्दा नाम ते लोकास्तान् स गच्छति ता ददत् ॥

சாஸ்திரத்திற்கு ஒவ்வாது வீண் டம்பத்திற்காகக் கொடுக்கப்படும் தானத்தால் விளையும் கேட்டைக் கீதை விளக்குவதாவது:

यः शास्त्रविधिमुत्सृज्य वर्तते कामकारतः।
न स सिद्धिमवाप्नोति न सुखं न परां गतिम् ॥

ய: சாஸ்த்ரவிதிமுத்ஸ்ருஜ்ய வர்ததே காமகாரத:
ந ஸ ஸித்திமவாப்னோதி ந ஸுகம் ந பராம் கதிம்

ஆசைவாய்ப்பட்டு சாஸ்திரத்தின் ஆணையை மீறி நடப்பவன் எவனோ அவன் பரிபூரணனாகான், சுகம்பெறான், முக்தியடையான்.

தானம் ஏற்பவரைத் தாழ்ந்தவராகக் கருதுதல் கூடாது. ஏற்றத் தாழ்வு பிரகிருதி முழுவதும் உண்டு; அதுவே இயற்கையின் அமைப்பு ஆகும். எனவே, தானம் கொடுக்கும்போது சிரத்தையுடன் கொடுத்தல் வேண்டும் என்பது தெளிவாகிறது.

தேவையை அனுசரித்து, நம்மால் எவ்வளவு கொடுப்பது சாத்தியமோ, அதற்கொப்ப வழங்குதல் வேண்டும். நம்மிடத்துக் கொடுப்பதற்கு அதிகமான பொருள்படையாமை குறித்து வெட்கி, தாராளமாகக் கொடுக்க இயலவில்லையே என எண்ணிப் பணிவுடன் கொடுக்க வேண்டும்.

'அச்சத்துடன் கொடுக்கவேண்டும்'— என்பதன் பொருள், தானத்தைப் பெற்றுக்கொண்டவர், பெற்ற பொருளைத் தக்க முறையில் செலவழிக்க வேண்டுமே என்னும் அச்சம் இருக்கவேண்டும் என்பதாம். கொடுத்த பொருள் தகாத முறையில் பயன்படுத்தப்பட்டால், அதனல் கொடுத்தவருக்குக் கேடு விளையும் எனச் சாஸ்திரம் பகர்கிறது. அதா

வது, தகாத செயலைச் செய்யத் தானம் கொடுத்தவர் உடந்தையாக ஆகிவிடுகிறார். எனவே, கேடு செய்ய ஒருவரைத்தூண்டிய குற்றம், தானப் பொருளை முறைதவறிக் கையாண்டவரால், தானம் கொடுத்தவரைச் சார்கிறது. ஆகவே தானப் பொருள் தக்கமுறையில் செலவழிக்கப்பட வேண்டுமே என்னும் அச்சத்துடன் கொடுக்கவேண்டும் என உபநிஷதம் கூறுகிறது.

மற்று. கொடுக்கத் தக்க இடத்தில் கொடாமல், பராமுகமாக இருந்துவிடலாகாதே என்னும் அச்சமும் இருத்தல் வேண்டும். இல்வாழ்வான் தன் குடும்பத்தைப் பேணுவதல்லாது, சுற்றத்தாரையும், வறியவரையும், துறவியரையும் பேணுதல் கடன். இதனையறிந்து தக்கார் தன்னிடத்தில் பொருள் வேண்டி வரும்போது, தவறாது தானம் செய்தல் இன்றியமையாததாகும். அவ்விதமான சந்தர்ப்பத்தில், தானம் செய்யாதொழிவானேல், அவன் பெரும் குற்றம் செய்தவனாகிறான். இதனையே திருவள்ளுவர்:

"துறந்தார்க்கும் துவ்வா தவர்க்கும்
இறந்தார்க்கும்
இல்வாழ்வான் என்பான் துணை"

என்கிறார்.

'संविदा देयम्'—இரக்கத்தால் தூண்டப்பட்டு நல்ல மனப்பான்மையுடன், இன்னார்க்கு இவை கொடுப்பது பொருத்தம் எனக்கருதி அதற்கேற்பக் கொடுத்தல் வேண்டும். கொடுக்கப்படும் பொருள், ஏற்பவர் பயன்படுத்தத் தக்கதாக இருத்தல் வேண்டும். வாஜசிரவஸ் கொடுத்த கிழட்டுப் பசுக்களால் ஒருவனுக்கு அவை சுமையாகுமே அல்லாது பயனேதும் இல்லை. பொதுவாக மக்கள் கெட்டுப்போன, பயன்படாத பொருள்களையே கொடுப்பதைக் காண்கிறோம். இவ்விதச் செயலால் ஒருவன் தன்னைக் கீழ்மைப்படுத்திக் கொள்கிறான்.

ईशावास्यमिदं सर्वं यत्किञ्च जगत्यां जगत् ।
ஈசாவாஸ்யமிதம் ஸர்வம் யத்கிஞ்ச
ஜகத்யாம் ஜகத்

"காணப்படுகின்ற பொருள்களையெல்லாம் ஈசன் மயமாகவே காணவேண்டும்" என ஈசாவாஸ்யோபநிஷதம் கூறுகிறது. அதாவது உலகப்பொருள்கள் யாவும் யாருடைய சொந்த உடைமைகள் அல்ல. ஆதலின் தம்மிடத்துள்ள பொருள்களில் எவருக்கும் உடைமைத் தன்மை (ममत्व) மமத்துவம்—என்னுடையது என்னும் பாவனை உண்டாகலாகாது. பிறர்க்குத் தம்மிடமுள்ள பொருள்களைக் கொடுப்பதன் மூலமாகத் "தம்முடையது" என்னும் பொருள் மீது வைத்துள்ள பொருந்தாத வாஞ்சையானது களையப்படுகிறது. இதற்காகவேதான் "தானமது கைவிடேல்" என்னும் கோட்பாடு வடிவெடுத்துள்ளது. ஒவ்வொருவரும் தம்மால் இயன்ற அளவு முறையோடு தானம் வழங்குதல் வேண்டும்.

"தானம் எல்லாக் குற்றத்தையும் மறைத்துவிடும்" என்று கூறுவதுண்டு. யாரேனும் ஒருவர் தாராளமாகத் தம்மிடத்துள்ள பொருளைக் கொடுத்துக்கொண்டே வந்தால் அவரிடத்துள்ள ஏனைய கீழான குணங்களை மறந்துவிட்டு அன்னவரைப் புகழ்ந்து பாராட்டுவதைக் காண்கிறோம். கர்ணனிடம் குறைபாடு இருந்தது. பாண்டவர்களிடம் அவன் நடந்துகொண்ட பாங்கு பாராட்டத் தக்கதன்று. ஆயினும் அவனுடைய கொடைத் தன்மையால் பிற்றைநாளில் பாராட்டுதற்குரியவனானான்.

கர்ணனின் தானத்தை இனி ஆராய்வோம். பயனேதும் கருதாது கேட்டார்க்கெல்லாம் பொருளை வாரி வழங்கிக்கொண்டே வந்தான். அவன் உயிர்க்கு உறுதுணையாய் அமைந்த, பிறக்கும்போதே உடன்பிறந்த, கவச குண்டலங்களைத் தானமாக இந்திரன் கேட்டபோது, அவற்றை இழப்பது தன் உயிர்க்கு அபாயமாக அமையும் என அறிந்தும் தயங்காது தன் உடலிலிருந்து அறுத்து அவைகளை அப்புறப்படுத்திக் கொடுத்தான். இத்தகைய தீரத்தைக்கண்டுஇந்திரன் பெரிதும் பாராட்டிச் சக்தி வாய்ந்த "சக்தி ஆயுதத்தை" ஒரே முறை கையாளலாம் என்ற நிபந்தனையுடன் கொடுத்தான். இவ்ஆயுதத்தை மஹாபாரத யுத்தத்தில் கடோத்கஜனைச் சமாளிக்க முடியாது திண்டாடியபோது கர்ணன் கடோத்கஜன்மீது ஏவிக் கொன்றான்.

அடுத்து, போர்க்களத்தில் அர்ஜுனனால் மிகவும் தாக்குண்டு, மரணத்தறுவாயில் இருக்கும்போது அந்தண வடிவில் ஸ்ரீ கிருஷ்ணன், கர்ணனிடம் தானம் தரும்படி கேட்கிறான்.

கொடுப்பதற்குத் தன்னிடம் தற்போது ஏதுமில்லையே என்று கர்ணன் மிகவும் வருந்துகிறான். கொடுப்பதற்குத் தற்போது ஒன்று இருக்கிறது என்று ஸ்ரீ கிருஷ்ணன் கர்ணனிடம் சொன்னபோது, 'அப்படி ஒன்றிருந்தால், சுட்டிக்காட்டினால் அதை வழங்கிவிடுகிறேன்' என்று கர்ணன் தெரிவிக்கும் பாங்கானது அவனது தானத்தின் சிறப்பை, உள்ளத்தின் மேன்மையை எடுத்துக் காட்டுகிறது. 'நீ இந்நாள்வரை செய்துவந்த தானத்தின் புண்ணியம் உன்னிடம் தற்போது எஞ்சிநிற்கிறது; அதனைத் தருவாயாக' என்று ஸ்ரீ கிருஷ்ணன் சுட்டிக்காட்ட, 'அப்படி என்னிடம் அப்புண்ணியம் தங்கியிருக்குமானால் அதனை இதோ பெற்றுக்கொள்ளுங்கள்' என்று கர்ணன் தன் உடலில் வழிந்துகொண்டிருந்த இரத்தத்தை எடுத்துத் தாரைவார்த்துக் கொடுக்கிறான். இம்மாபெரும் செயலால் முக்தி என்னும் நற்பேறு கர்ணனுக்கு வாய்க்கிறது. ஆக சீரிய முறையில் தானம் செய்தால் ஒருவன் முக்தியையும் பெறலாம் என அறிகிறோம்.

தானம் செய்யும்போது எத்தகைய மனநிலையைப் பெற்றிருக்கவேண்டும் என இனி ஆராய்வோம். ஐயம் ஏற்பவன், பொருளைக் கொடுப்பதற்குச் சந்தர்ப்பத்தை ஏற்படுத்துகிறான். நம்முள் புதைந்துள்ள கொடைத் தன்மையை, இரக்க உணர்ச்சியைத் தூண்டும் தூண்டுகோலாக அவன் அமைகிறான். எனவே ஐயமிடுபவன்—ஐயம் ஏற்பவனுக்கு நன்றி செலுத்தக் கடமைப்பட்டவனாகிறான். ஐயம் ஏற்பவன் நன்றிகூறுவது என்பது மேல்நாட்டு முறை. ஹிந்துப்பண்போ, 'अतिथ देवो भव— அதிதி தேவோ பவ' —விருந்தினனை —ஐயமேற்பவனைத் தெய்வமாகத் தொழு என்கிறது. ஐயமிடுவதால், ஐயமிடுபவன்தான் மன அமைப்பில் மேலோங்குகிறான். ஆக உண்மையில் தானத்தால், தானம் செய்பவன்தான் நலமடைகிறான். எனவே, பொருளை ஏற்பவன் மறைமுகமாக உண்டாக்கும் நலன் கருதி, ஐயமிடுபவன் வணக்கத்துடன் பொருளைக் கொடுத்தல் வேண்டும்.

புகழைக் கருதியோ, மண்ணுலக, விண்ணுலகப்பெற்றியைக் கருதியோ செய்யும் தானம் இழிந்தது. தானம் செய்தல் இயல்பாக உண்டான இரக்க உணர்வால், மன நெகிழ்ச்சியால் அமையவேண்டும்.

எதைக் கேட்டாலும் கொடுத்தல் என்னும் ஒருவகை தனிப்பட்ட மனநிலை சிலருக்கு அமைகிறது. மேற்போக்காகப் பார்க்குமிடத்து அச்செயல் அங்கீகரிக்கப்படாததாகத் தோன்றலாம். ஆயினும் எந்த மனநிலையில் வழங்கப்பட்டது என ஆராயுமிடத்துக் குற்றம் சாட்டுவது பொருந்தாது என்பது புலனாகும். வள்ளல் குமணன் தன்தலையைத் தானமாகத்தர முன்வந்தது, அவனுடைய பெருந்தன்மையையே எடுத்துக் காட்டுகிறது. பாரி, தன் தேரைக் கொடி படரக் காட்டில் விட்டது சரியா? பேகன் மயிலுக்குத் தன் போர்வையைக் கொடுத்தது சரியா? என ஆராயுமிடத்து, இவ் ஆராய்ச்சியை எல்லாம் சற்றும் எண்ணிப்பாராது பாரியும், பேகனும் அப்போது அவர்களுக்குத் தோன்றிய மன நெகிழ்ச்சிக்கு ஏற்றவாறு நடந்து கொண்டார்கள் என்பதைச் சிந்திக்கும்போது அன்னவர்களின் செயலில் குறையில்லை, நிறைதான் மிளிர்கிறது என்பது புலனாகும்.

தானம் மூன்று படித்தரங்களில் அமைகிறது. அவையாவன: 1. அருள் தானம் 2. அறிவு தானம் 3. பொருள் தானம். அருள்தானம் இவைகளில் தலைத்தரமானது. ஏனெனில் ஆத்மஞானத்தைப் புகட்டி, ஆத்மஞானத்தை உணரும்படி செய்வதால் வாழ்வின் பிரச்னைகள் அனைத்தும் தீர்க்கப்படுகின்றன. முண்டகோபநிஷதம் (2—2—8) கூறுவதாவது:

**भिद्यते हृदयग्रन्थिश्छिद्यन्ते सर्वसंशयाः ।**
**क्षीयन्ते चास्य कर्माणि तस्मिन दृष्टे परावरे ॥**

பித்யதே ஹ்ருதய க்ரந்திச்சித்யந்தே
ஸர்வஸம்சயா:
க்ஷீயந்தே சாஸ்ய கர்மாணி தஸ்மின்
த்ருஷ்டே பராவரே

அந்தப் பரம்பொருளைக் கண்டதும் இதய முடிச்சுக்கள் எல்லாம் அவிழ்கின்றன; சந்தேகங்களெல்லாம் ஒழிகின்றன; கர்மங்களெல்லாம் நாசமடைகின்றன. எனவே, அருள் தானம் தலைத்தரமானது என நவிலப்படுகிறது. அருள் தானத்தை, எல்லாராலும் வழங்க இயலாது. ஆத்ம ஞானத்தைப் பெற்றவரே, சுவானுபூதியில் உணர்ந்தவரே உயர்ந்த

நிலையில் முழுமையாகத் தர இயலும். மற்று, தம்மைப் பண்படுத்திக்கொள்ளும் முறையில் ஆத்மிக வாழ்வு வாழ்ந்து கொண்டிருப்பவர் புகட்டும், வழங்கும் ஞானமானது, ஏற்பவன், தன் வாழ்க்கையைச் செம்மைப்படுத்தப் பயன் படுகிறது. எனவே ஏனைய அறிவு, பொருள் தானங்களை நோக்குமிடத்து அருள்தானமே தலை சிறந்ததாகும்.

அறிவு தானம் என்பது உலகியல் அறிவைப் புகட்டுதலாம். உலகியல் அறிவால் ஒருவன் உலகைப்பற்றித் தெளிவான அறிவைப் பெறுகிறான். நடைமுறை வாழ்வில் ஏற்படும் பல சிக்கல்களைக் களைய அவ்வறிவு பயன்படுகிறது. உலகியல் அறிவைக்கொண்டு உலகப் பொருளை ஈட்டவும், அவைகளை அனுபவிக்கவும் ஒருவன் அறிகிறான். என்றாலும் உலகப் பொருள்களால் எவனும் நிரந்தரமான இன்பத்தை, மனச் சாந்தியைப் பெற முடியாது. எனவே அறிவுதானம் இடைத்தரமானது எனப்படுகிறது.

அடுத்துச் சரீரத் தேவைக்கான பொருளை வழங்குதல் பொருள் தானம் எனப்படும். பொருள் தானத்தைப் பெறுபவன் அப்போது மட்டும் திருப்தியடைகிறான். திரும்பத் திரும்பத் தேவை ஏற்பட்டுக்கொண்டே இருக்கிறது. உதாரணமாக, ஒருவன் பசித்திருக்கும் போது உணவு வழங்கப்படுவதாக வைத்துக் கொள்வோம். அப்போதைக்குப் பசி நீங்குகிறது. என்றாலும் சிறிது நேரம் கழித்து மீண்டும் பசி ஏற்படுகிறது. நோயைக் களைய மருந்து கொடுக்கப்படுகிறது. ஆனால் ஒரு நோய் போனால் மற்றொரு நோய் வருகிறது. இதற்கு முடிவு என்பதில்லை. ஆக, தாற்காலிகத் தேவை மட்டும் பொருள் தானத்தால் பூர்த்தி செய்யப்படுவதால் அது கடைத்தரமானது.

ஒவ்வொரு கர்மத்திலும் நலன், கேடு சூழ்ந்திருக்கின்றன. எனவே, பந்த நிலையினின்று நீங்க கர்மமெல்லாம் துறக்கப்படவேண்டும் என்பது ஒருசாரார் கோட்பாடாகும். ஸ்ரீ கிருஷ்ணபகவான் இதைப் பற்றித் தம்கருத்தைத் தெரிவிக்கும் போது தானம் செய்வதை விட்டு விடலாகாது என்கிறார்.

यज्ञदानतपः कर्म न त्याज्यं कार्यमेव तत् ।
यज्ञो दानं तपश्चैव पावनानि मनीषिणाम् ॥

யக்ஞதானதப: கர்ம ந த்யாஜ்யம்
கார்யமேவ தத்
யக்ஞோ தானம் தபஸ்சைவ பாவனானி
மனீஷிணாம்

யக்ஞம் தானம், தபசு ஆகிய கர்மங்கள் விடப்படுபவை அல்ல. அவை செயற்பாலவையே. யக்ஞமும் தானமும் தவமும் அறிஞர்களுக்குப் புனிதம் வழங்குபவைகளாம்.

தானம் மனதைத் தூய்மைப்படுத்துவதால் அதனை அவசியம் செய்தே ஆகவேண்டும். சுயநலப்பற்றுதலால் ஏற்படும் பொருள்பற்றை நீக்கத் தானம் தக்க சாதனமாகும். மேலும் தானம் செய்வதால் பிறரும் நன்மையடைகின்றனர். இப் பூவுலக வாழ்க்கை அதனால் மேன்மையடைகிறது.

மேலும் சிருஷ்டியின் அமைப்பே கொடுக்கல், வாங்கலில்தான் நிலைபெற்றிருக்கிறது. இதைப்பற்றிக் கீதை இங்ஙனம் குறிப்பிடுகிறது: (அத். III சு. *10.*)

सहयज्ञाः प्रजाः सृष्ट्वा पुरोवाच प्रजापतिः ।
अनेन प्रसविष्यध्वम् एष वोऽस्त्विष्टकामधुक् ॥

ஸஹயக்ஞா: ப்ரஜா: ஸ்ருஷ்ட்வா புரோ
வாச ப்ரஜாபதி:
அனேன ப்ரஸவிஷ்யத்வம் ஏஷவோऽஸ்
த்விஷ்டகாமதுக்

சிருஷ்டி துவக்கத்தில் பிரம்மதேவன் யக்ஞத்தோடே பிரஜைகளைப் படைத்து, "இதனால் விருத்தியடையுங்கள்; இது உங்களுக்குக் காமதேனுவாகட்டும்" என்றார்.

தங்களுக்கென்று தேடுபவர்களுக்குச் செல்வம் சேர்ந்து பிறகு அவர்களை விட்டுச் சென்று விடுகிறது. ஒன்றையும் எதிர்பாராது கொடுத்துக்கொண்டே இருப்பவர்க்குக்கொடுப்பதற்கு வேண்டிய பொருள்தானே வந்தடைகிறது. சிருஷ்டியின் மேலாம் திட்டம் இதுவேயாம்.

ஆக, தானம் சிறப்பு ஈனும், செல்வமும் ஈனும், முக்தி ஈறாக அனைத்தையும் ஈனும். இதைத் தெளிவாக அறிந்து, "ஐயமிட்டு உண்" என்னும் கோட்பாட்டைச் சிந்தித்து, "தானம் சுருங்கில் வானம் சுருங்கும்" என்பதனால் வகையறிந்து, தக்கார்க்குத் தகுந்தபடி தக்க மனநிலையில் நின்று, பயனேதும் கருதாது தானம் என்னும் ஒப்பற்ற கர்மத்தை நாளும் செய்து மேலாம் பேறு எய்துவோமாக.

# ஸ்ரீ லலிதா வியாக்கியானம்-179

*981.* **ज्ञानज्ञेयस्वरूपिणी ஞானஞேய ஸ்வரூபிணீ**— அறிவாகவும், அறியப்படுபொருளாகவும் இருப்பவள் அம்பிகை என்பது இந்த நாமத்தின் பொருள். மூலநிலையில் அம்பிகை சைதன்யம் அல்லது பேரறிவு சொரூபமாக இருக்கின்றாள். இப்பேரறிவே வாலறிவு எனவும் பிரக்ஞானம் எனவும் சுத்த சைதன்யம் எனவும் சொல்லப்படுகிறது. இப்பேரறிவு அந்தந்த ஜீவனுடைய அந்தக்கரணத்தில் பிரதிபிம்பிக்கிறபொழுது இதற்குப் புத்தி என்னும் பெயர் கொடுக்கப்பட்டிருக்கிறது. புத்தியை விளக்குவதில் உயிர்க்கு உயிர் வித்தியாசப்படுகிறது. ஆனால் மூலநிலையில் உள்ள அறிவோ முற்றிலும் தன்மயமானது. ஆதலால்தான் அது வாலறிவு எனப்படுகிறது. அதில் பேதம் ஏதும் இல்லை. உலக நடைமுறையில் ஜீவன் படைத்துள்ள அறிவாக அது கீழ்நிலைக்கு இறங்கி வருகின்றபொழுது வேற்றுமையும் அங்குத் தோற்றத்துக்கு வருகிறது. பக்தன் ஒருவன் வனத்தில் சஞ்சரித்துத் திரியும் விலங்கு ஒன்றைப் பார்க்கிறான். அது மான் என அவன் தீர்மானிக்கிறான். அதைத் தொடர்ந்து அது சிவனார் கையில் ஏந்தியிருக்கும் உயிர் எனவும் அது மனதுக்குச் சின்னமாய் அமைந்திருக்கிறது எனவும் அவன் பொருள்படுத்துகின்றான். ஆக பக்தனாக அமைந்திருக்கும் ஜீவாத்மன் ஒருவன் படைத்துள்ள அறிவு அல்லது ஞானத்துக்கேற்ற பிரகாரம் ஞேயம் அல்லது அறியப்படுபொருள் காட்சி தருகிறது. அதே விலங்கைப் புலி அல்லது சிங்கம் ஒன்று பார்க்கிறது. அவ்விலங்கைத் தன் உணவுக்குரிய பொருள் என அது பொருள்படுத்துகிறது. புறத்திலுள்ள ஓர் உயிரைப் பக்தன் ஒரு பாங்கில் பொருள்படுத்துகிறான். அதே உயிரைக் காட்டுமிருகங்கள் தம்போக்கில் பொருள்படுத்துகின்றன. ஆகவே, ஜீவர்கள் படைத்துள்ள ஞானத்தில் பேதம் திகழ்கிறது. அந்தந்த உயிரிடத்து அததற்கேற்ற ஞானம் அல்லது அறிவாய் இலங்குபவள் அன்னை பராசக்தியே.

பேதம் என்பது பிரகிருதியின் கூறு. பிரகிருதியில் உள்ள இரண்டு பொருள்களுக்கிடையில் ஒற்றுமை இல்லை; பேதமே தென்படுகிறது. ஒவ்வொரு பொருளையும் அதன் அதன் பாங்குக்கேற்றவாறு பொருள்படுத்துவது ஜீவாத்மன் படைத்துள்ள அறிவின் போக்காகும். சர்க்கரையைக்கொண்டு மிட்டாய் வகைகள் செய்யப்படுகின்றன. அவைகளுள் பசு மிட்டாய், குதிரை மிட்டாய், யானை மிட்டாய் இப்படியெல்லாம் வடிவத்தில் பேதம் திகழ்கிறது. குழந்தை ஒன்று அந்தந்த மிட்டாயை அததற்கேற்ற பெயர் சொல்லிப் பாகுபடுத்துவது அக்குழந்தை படைத்துள்ள அறிவுக்கு அறிகுறியாம். வடிவுக்கேற்ற பெயர்சொல்லத்தெரியாவிட்டால் அக்குழந்தையினிடத்துச் சரியான அறிவுவளர்ச்சி இல்லை என்கிறோம். ஆக, உலக நிலையில் வைத்துப் பொருள்களுக்கிடையே உள்ள பேதத்தை உள்ளபடி அறிந்துகொள்வது அறிவு. இனி மிட்டாய் அமைக்கிறவனுக்கு ஒவ்வொன்றிலும் அமைந்துள்ள சர்க்கரை முக்கியமானது. ஒரே அளவு சர்க்கரையை அவன் மிட்டாய்கள் அனைத்திலும் வைத்துச் செய்திருக்கிறான். ஆதலால் பெயர் எதுவாயினும் அவன் விலை மதிப்புப் போடுவது ஒரே விதமானது.

கண்கொண்டு பார்க்கும் ஜீவாத்மனுக்குப் புறத்திலுள்ள பிரகிருதியானது ஞேயம் அல்லது காணப்படு பொருளாகக் காட்சி கொடுக்கிறது. பேதம் நிறைந்துள்ள பிரகிருதியாக வடிவெடுத்திருப்பவள் அன்னை பராசக்தி. ஆங்காங்குள்ள பேதங்களை அறிந்துகொள்ளும் அறிவாக வடிவெடுத்திருப்பவளும் அன்னை பராசக்தியே. இங்ஙனம் உலக வியவகாரங்களுக்கேற்ற ஞானமாகவும் ஞேயமாகவும் இலங்குபவள் பராசக்தியேயாம். இவ் உண்மையை அறிந்து சூழ்நிலைக்கு ஏற்ற பிரகாரம் வாழ்வைக் கொண்டு செலுத்துவது அன்னை பராசக்தியின் வழிபாடாம்.

*982.* **योनिमुद्रा** யோனி முத்ரா—யோனியின் வடிவில் இலங்குபவள் என்பது இந்த நாமத்தின் பொருள். யோனி என்னும் பதம் அல்குல் என்பதாம். அன்னை பராசக்தியிடமிருந்து அண்டங்கள் அனைத்தும் வடிவெடுத்து

வந்திருப்பதால் அவள் யாவற்றுக்கும் யோனி அல்லது பிறப்பிடமாகின்ருள் என்பது தத்துவம். முத்திரை என்பது கை விரல்களைக் கொண்டு அமைக்கின்ற வடிவம். அதன் மூலம் கருத்துக்கள் விளக்கப்படுகின்றன. உலகில் உள்ள மக்கள் விதவிதமான மொழிகளைப் பேசுகின்றனர். ஒரு நாட்டில் கையாளப்படுகின்ற மொழி இன்னெரு நாட்டு மக்களுக்கு விளங்குவதில்லை. ஆனுல் எல்லா நாடுகளிலுமுள்ள ஊமையர்கள் அவரவர்க்கு உள்ள கருத்தைச் சைகையின் மூலம் வெளிப்படுத்துவதால் எல்லா நாட்டவர்களும் அதைச் சரியாக அறிந்துகொள்கின்றனர். ஆக எல்லா நாடுகளிலும் உள்ள ஊமையர்களுக்குச் சைகை என்னும் மொழி பொதுவானதாம். அதே விதத்தில் முத்திரை என்னும் விரலமைப்பு கருத்துக்கேற்ற பிரகாரம் ஐதிகமாக அமைந்திருக்கின்றது. அப்படி அமைந்துள்ள முத்திரைகளுள் தட்சிணுமூர்த்தி காட்டும் சின் முத்திரை பிரகிருதியின் முடிந்த தத்துவத்துக்கு விளக்கமாகின்றது. அதே பாங்கில் அன்னை பராசக்தி படைத்துள்ள யோனி முத்திரையானது பிரபஞ்சத்தின் தோற்றத்துக்கு அறிகுறியாகின்றது. மொழியிலே சூத்திரம் அல்லது குறள் என்று சொல்லப்படும் அமைப்பில் பெரிய கருத்துக்கள் சில சொற்களில் அடங்கியிருக்கின்றன. இனி, முத்திரையின் அமைப்போ சொல்லைக் கடந்தது. சொல் ஆங்குத் தேவையில்லை. ஆனுல் விரல்கள் மூலம் காட்டப்படும் கருத்துக்கள் பரந்த பாங்குடையனவாம். ஆதலால் ஆத்ம சாதகன் புரிகின்ற கிரியா விசேஷங்களோடு கூடிய வழிபாட்டில் முத்திரைகள் முக்கியமான இடம் பெறுகின்றன. அம்முத்திரைகளுள் யோனி முத்திரையின் புனிதத்தை அறிகின்றவன் அன்னை பராசக்தியின் வழிபாட்டுக்குத் தகுதி வாய்ந்த சாதகனுகிருன் என்பது யோனி முத்திரையின் கருத்தாம்.

983. त्रिखण्डेशी த்ரிகண்டேசீ — மூன்று கண்டங்களுக்கும் ஈச்வரியாக இருப்பவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

அம்பிகைவழிபாட்டுக்குஇன்றியமையாதவை களாய் இருக்கின்றவை தச முத்திரைகள். அப்பத்து முத்திரைகளுள் முக்கியமானதாகவும் கடைசியானதாகவும் இருப்பது த்ரிகண்டா முத்திரை. இதற்கு மஹாயோனி முத்திரை என்பது மற்றெரு பெயர். சூரியன், சந்திரன், அக்னி ஆகிய மூன்று கண்டங்களுக்கும் அன்னை பரமேசுவரி இறைவியாக இலங்குகின்ருள். வெளிச்சம் தருவனவாகவும் வாழ்க்கைக்கு இன்றியமையாதவைகளாகவும் இம் மூன்றும் அமைந்திருக்கின்றன. ஆதலால் அன்னையின் வழிபாட்டில் இந்த மூன்றும் முக்கியமான இடம் பெற்று வருகின்றன.

984 त्रिगुणा த்ரிகுணு — மூன்று குணங்களாய் வடிவெடுத்திருப்பவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

ஸத்வம், ரஜஸ், தமஸ் என இம்மூன்று குணங்கள் பெயர் பெறுகின்றன. பிரபஞ்சம் முழுதும் முக்குணமயமானது. படம் ஒன்றை அச்சடிக்கின்றபொழுது மூன்று நிறங்கள் (Tricolour) பொருந்திய படம் என்கிரேம். மூன்று அச்சில் படம் ஒன்றுக்குத் தேவையாயுள்ள நிறங்களையும் அமைப்பையும் அதன்மீது ஏற்றிவிடலாம். அதற்கு நிகராக இப்பிரபஞ்சம் இலங்குகின்றது. இதில் எந்தப் பகுதியை யாவது இந்த மூன்று குணங்களுக்கப்பால் காணமுடியாது. மூன்று குணங்களுள் ஸத்வ குணத்தின் நிறம் வெண்மை. ரஜோகுணத்தின் நிறம் சிவப்பு; தமோகுணம் கறுப்பு நிறமானது. சேதனமயமான உயிர்களாக இலங்குவது ஸத்வ குணம். சேதன அசேதன நடவடிக்கைகளாக இலங்குவது ரஜோகுணம். செயலற்று ஜடமாய்க் கிடப்பது தமோ குணம். இந்த மூன்று குணங்களின் பாங்குகளையும் பம்பரம் ஒன்றின் செயல்களினின்று அறிந்து கொள்வது சாத்தியம். நன்ருகச் சுழல்கிற பம்பரம் ஒன்று அசைவற்று நிற்பது போன்று தென்படுகின்றது. அங்கிலேயச் சிறுவர்கள் 'பம்பரம் உறங்குகிறது' என்பார்கள். அது உறங்குவது போன்று தென்படுகின்றது. ஆயினும் பொருத்தமான பாங்கில் நடுநிலை பிறழாது அது சுழன்றுகொண்டிருக்கிறது. ஸத்துவத்தின் சிறப்பு இத்தகையது. மற்றெரு பம்பரம் தடதடவென்று ஓலமிட்டுக் கொண்டும் இங்குமங்கும் சாய்ந்துகொண்டும் சுழல்கிறது. ரஜோ குணத்தின் பாங்கு இத்தகையது. மூன்ருவது பம்பரம் செயலற்றுத் தரையில் கிடக்கிறது.

இத்தகைய பம்பரத்தின் பாங்குக்கு நிகரானது தமோகுணம். அடுத்தபடியாகப் பிரபஞ்சம் சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹார மயமாக இலங்கு கிறது. இந்த மூன்றுவிதச் செயல்களுக்கும் ஆதாரமாயிருப்பது ஸத்வம், ரஜஸ், தமஸ் ஆகிய மூன்று குணங்களாம். சிருஷ்டி கிருத் தியத்துக்கு முகாமையாயிருப்பது ரஜோ குணம். நிலைபேறு அல்லது ஸ்திதிக்கு முகாமை யாயிருப்பது ஸத்வகுணம். மறைந்துபட்டுப் போதல் அல்லது சம்ஹாரத்துக்கு அடிப்படை யாயிருப்பது தமோகுணம். முக்குண ஸகித மாய் இருக்கும் புருஷ தத்துவத்துக்கு ஈசுவரன் என்றும் சகுணப் பிரம்மம் என்றும் பகவான் என்றும் பகவதி என்றும் பெயர்கள் தரப் பட்டிருக்கின்றன. இத்தகைய சகுணப் பிரம்ம உபாசனையினின்று ஆத்ம சாதகன் நிர்க்குணப் பிரம்மத்தை அடையப் பெறுகிறான்.

985. **अम्बा அம்பா**—அகிலாண்டங்களுக் கும் தாயாய் இலங்குபவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

முக்குணங்கள் அவளிடத்திருந்தே வந்திருக் கின்றன. மீண்டும் அந்த மூன்று குணங்கள் அவளிடத்தே ஒடுங்குகின்றன. சான்று ஒன் றின் மூலம் இக்கோட்பாட்டை விளக்கலாம். சூரிய கிரணம் சூரியனிடத்திருந்து கிளம்பி நாலாபக்கமும் வியாபிக்கிறது. ஆயினும் நம் ஊனக் கண்கொண்டு அந்த வெளிச்சத்தைக் காண முடியாது. அத்தகைய சூரிய வெளிச் சத்துக்கு நிகர் பரதேவதையாயுள்ள அம்பாள். அச்சூரிய வெளிச்சம் ஒரு மேகத்தின் வாயிலா கச் செல்லுமாகில் அது ஏழு நிறங்களாகச் சிதறடைகிறது. அங்ஙனம் சிதறடைந்துள்ள நிறங்களே வானவில் என்றும் இந்திர தனுசு என்றும் அழைக்கப்படுகின்றன. தோற்றத் துக்கு வந்துள்ள வானவில்லுக்கு ஒப்பானது சகுணப் பிரம்மம் அல்லது முக்குணங்களோடு கூடிய அம்பிகை.

986. **त्रिकोणगा த்ரிகோணகா** — மூன்று கோண வடிவுடையவள் என்பது இந்த நாமத் தின் பொருள்.

பிரபஞ்சத்துக்குச் சின்னமாய் அமைந்திருப் பது முக்கோணம். இந்த மூன்று கோணங் களுள் பிரபஞ்சத்தின் அமைப்பு முழுதும் அடங் கப் பெற்றிருக்கிறது. மூன்று குணமாயிருப்பது ஒரு கோணம். பிரபஞ்சம் முழுதுக்கும் மூலப் பொருளாயிருப்பது முக்குணம் என்பது இதன் கருத்து. ஒருபொருளுக்கு Material Cause-எந்த வஸ்துவைக்கொண்டானது என்பதுஒரு கோட் பாடு. வஸ்திரங்கள் நூலினின்று வடிவெடுத் திருக்கின்றன. மட்பாண்டங்கள் களிமண்ணி னின்று வடிவெடுத்திருக்கின்றன. அதேபாங் கில் இப்பிரபஞ்சமானது மூன்று குணங்களி னின்று உருவெடுத்தது என்னும் கோட் பாட்டை மூன்று கோணங்களுள் ஒரு கோணம் எடுத்துக்காட்டுவதாய் இலங்குகின்றது. அங் ஙனம் வடிவெடுத்துள்ள பிரபஞ்சத்தில் மூன்று செயல்கள் நிகழ்ந்து வருகின்றன. சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் என அம் மூன்று செயல் கள் பொருள்படுகின்றன. பிரபஞ்சத்தை ஆராய்ந்து பார்த்தால் புதிய வடிவங்கள் சேதன அசேதன மயமாக அதில் வடிவெடுப் பதைக் காண்கிறோம். அப்படி வடிவெடுப்பது சிருஷ்டிக்கு விளக்கமாம். அங்ஙனம் வடி வத்தை அடையப்பெற்றவைகள் அந்தந்த வடி வத்தில் கொஞ்சகாலம் நிலைத்திருக்கின்றன. அப்படி நிலைத்திருக்கிற செயல் ஸ்திதி என் னும் பெயர் பெறுகிறது. பின்பு அது மறைந்து பட்டுப்போகிறது. சூனியமாதல் என்ப தன்று அதன் பொருள். தோன்றிய நிலையிலி ருந்து தோன்றா நிலைக்கு அது மறைந்துபட் டுப்போகிறது. இச்செயல் ஸம்ஹாரம் என் னும் பெயர் பெற்றுள்ளது. இங்ஙனம் இம் மூன்று செயல்கள் சேர்ந்தது இரண்டாவது கோணம். மூன்றாவது கோணமாக அமைந் திருப்பது கால தேச நிமித்தமாம். இப்பிர பஞ்சமானது காலத்தை அடிப்படையாகக் கொண்டது. காலத்தை அறிந்துகொள்வதும் அண்டங்களின் நடைமுறையை அறிந்துகொள் வதும் ஒன்றேயாம். தேசம் என்பது திக்கு அல்லது இடம். அண்டங்கள் ஆங்காங்கு இடம் பெற்றிருப்பது தேசம் எனப்படுகிறது. அடுத்தபடியாக நிமித்தம் என்பது இந்த அண்டங்களில் காரண காரியமாக நிகழ்ந்து வரும் பற்பல செயல்களாம். காரியம் நமக்கு விளங்குகிறது; காரணம் நமக்கு விளங்குவ தில்லை. ஆகவே கால தேச நிமித்தமாகத் தன்னை விளக்கிக் காட்டிக் கொண்டிருப்பதன் சின்னம் மூன்றாவது கோணம்.

# ஸ்ரீமத் பாகவதம்

(சுவாமி ஸதானந்தர்)

தேவகி நந்தனன் ஆகிய பிரபு பாண்டவர்களை ரக்ஷித்துவிட்டுத் துவாரகைக்குப் புறப்பட ஆயத்தமானர். அப்பொழுது குந்தி தன் மக்கள் ஐவருடனும் மருமகளுடனும் ஸ்ரீ கிருஷ்ணனிடம் வந்து இங்ஙனம் பிரார்த்தித்தாள்: "கிருஷ்ணு நீ ஒருநாளும் யாருக்குமே இளையவன் அல்லன். ஏனென்றல் நீ ஆதிமூலம், ஆதிநாராயணன். ஆகையால் நாங்கள் அனைவரும் நின் திருத்தாள் பணிகிறோம். நீ இப் பிரபஞ்சத்தின் பிரபு; நாயகன். இப்பிரபஞ்சம் உன்னிடத்திலிருந்து தோன்றிவந்து உன் மகிமையை விளக்கிக்கொண்டிருக்கிறது. மாயையில் ஒருநாளும் நீ மூழ்கிவிடமாட்டாய். நீ இட்ட கட்டளைப்படி மாயை நடக்கிறது. நீ சிருஷ்டியைக் கடந்தவன். ஆகவே ஜீவர்களுக்கு நீ ஸ்தூலத்தில் காணக் கிடைக்காதவன். பிரபு, இந்திரியங்கள் மூலம் பெற்ற புலனறிவுக்கு அப்பாற்பட்டவன் நீ. நீ க்ஷீணமற்றவன், மாறுதல் அற்றவன். நாடகத்தில் நடப்பவைகளைக் குருடன் எப்படிக் காணமாட்டானே அதே போன்று தடித்த சரீர போதத்தால் உன் தெய்வ இயல்பை ஜீவர்கள் அறிய மாட்டார்கள். இந்தப் பஞ்சபூத சரீரம் உன்னை எங்ஙனம் அறிய வல்லதாகும்? காமக் குரோதாதிகளை அறவே வென்ற தூய உள்ளமும் அறிவும் வாய்ந்த முனிவர்களும், உன் தரிசனம் பெறமாட்டாதவர்களாய் இருக்க, இவ்வுலக விவகாரங்களில் உழலும் நாங்கள் உன் மேலாம் காட்சியை எங்ஙனம் பெறமுடியும்? பகவானே, உன்னை முழுதும் அறியாமல் உன்னிடத்தில் பேரன்பு, பராபக்தி எப்படி வரும்? ஆகையால் ஓ கிருஷ்ணு, வாசுதேவா, தேவகிநந்தனு, நந்தகுமாரா, கோபாலா, கோவிந்தா, தாமரை போன்ற தொப்பூழ் உடையவனே, அம்புஜ மாலை அணிந்தவனே, தாமரை போன்று நன்கு மலர்ந்த கண்களை உடையவனே, பக்தியினுலும் ஞானத்தினுலும், வேறு எதனுலும் நீ முழுதும் அறியப்பட முடியாதவன். உன் அகண்டாகார சொருபத்தை யாரே அறிய வல்லார்! உன் அனந்த கல்யாண குணங்களால் கவரப்பட்டவர்களாகி உன் மலரடிகளைப் பணிகிறோம்.

"ஹிருஷீகேசா, நீண்ட காலம் கொடிய கம்சனுல் சிறையில் அடைக்கப்பட்டிருந்த பெருந் துயரத்துக்கு ஆளாயிருந்த உன் தாயாரை நீ சிறையிலிருந்து விடுவித்தாய்; துயர் துடைத்தாய். என்னையும் என் ஐந்து மக்களையும் எவ்வளவு பெரும் ஆபத்து, விபத்து, துயரங்களினின்று எத்தனை முறை காத்தருளினுய்! பிரபோ, உனக்கு என்பேரில் விசேஷக் கருணை, உன் தாயிடம் காட்டியதைவிட அதிகப் பரிவு இருப்பதை நான் உணர்கிறேன். உன் தாய்க்கு உதவப் பலர் இருந்தனர். ஆயினும் அவள் நீண்டகாலம் கடினமான சிறைவாசம் பண்ண வேண்டியிருந்தது. அத்துடன் தன் சிசுக்கள் ஒவ்வொருவரையும் தன் கண்முன்னே இழக்க நேரிட்டதைப் பார்த்து அவள் அடைந்த வேதனை என்னே! ஆயினும் நீ அவளை நீண்ட காலத்திற்குப் பிறகே சிறை மீட்டாய். ஆனுல் கிருஷ்ணு, எனக்கோ உன்னைத்தவிர வேறு கதி இல்லை. எனக்கு அடுத்தடுத்துத் துன்பங்கள் வந்த போதும் ஆரம்பம் முதலே நீ என்னையும் என் ஐந்து குமாரர்களையும் இடையருது காத்தருளினுய். ஓ கிருஷ்ணு, உன் அருளினுலேயே என் ஐந்து கண்மணிகளும் விஷ உணவு, அரக்கு மாளிகை, அரக்கனுகிய இடும்பன் ஆகிய ஆபத்துக்களிலிருந்து தப்பினுர்கள். சூதாடிய போதும், வனவாசத்தின் போதும் நேரிட்ட ஆபத்துக்களினின்றும், குருக்ஷேத்திரப் போரிலும் நீ காத்தருளினுய். இப்போது பாண்டவ வம்சம் நிர்மூலமாகப் போகவேண்டும் என்று ஏவப்பட்ட அஸ்வத்தாமனின் பிரம்மாஸ்திரத்தினின்றும் நீ காத்தருளினுய். ஜகந்நாதா, ஜகத்ரக்ஷகா! எங்களுக்கு இடையருது துன்பத்தைக் கொடுத்துக் கொண்டிரு என்று உன்னைப் பிரார்த்திக்கிறேன். அதன் மூலம் பிரபோ, உன் ஒப்பற்ற கருணையும் எங்களுக்குக் கிடைத்துக்கொண்டே இருக்கும். பிரபோ, இதையே நான் உன்னிடத்து வேண்டுகிறேன். உன் திருக்காட்சியைக் காணப்பெற்ற ஜீவனுக்கு ஜனன மரண பந்தம் தீர்ந்துவிடுகிறது. ஆண்டவனே, உலகசம்பத்து, சௌபாக்கியத்தில் ஒரு

வித நலனும் இல்லை என்பதைக் கண்டுகொண் டேன். உயர்குடிப் பிறப்பு, செல்வம், கல்வி, அதிகாரம், ஆடம்பரம், கீர்த்தி ஆகியவை களில் மூழ்கிப்போனவர்களுக்கு உன் திருநா மத்தை நினைக்கவும் சொல்லவும் முடிவதில்லை. பிரபோ, நீ ஏழை பங்காளன். உலக சம்பத் துக்களை உதறி எறிந்தவனுக்கு நீ காட்சிக்கு எளியவன் ஆகிவிடுகிறாய். தேவ தேவா, உன்னை மீண்டும் மீண்டும் வணங்குகிறேன். பக்தர்களுக்கு எளியவனே! நீ அளவில்லாத அன்பை உன் பக்தர்கள்மேல் பொழிகிறாய். பக்தனுக்கு அனைத்தும் நீயே. உனக்கு அனைத் தும் பக்தனே. உனக்கு அபிஷேக ஆரா தனை, தேர், திருவிழா இவைகள் பொருட் டல்ல. செல்வத்தினால் உனக்கு ஆவதென்ன? நீ எதைக் குறித்து ஆசைப்படப் போகிறாய்? நீ தன்னில் தானாய் இன்புற்றிருக்கிற ஆத்ம திருப்தன். பற்று ஏதும் அற்றவனாய் புலன் களின் வேட்கை ஏதும் இலனாய் நீ யாண்டும் பரம சாந்தனாய் இருந்து வருகிறாய். நீ திரி லோக ரக்ஷகன், முக்திப் பிரதாயகன். உன் னைச் சரணடைகிறேன்."

"பிரபோ! உன்னை அருமைத் தேவகியின் புத்திரனாகமட்டும் காணவில்லை. இவ்வுலகை விளையாட்டாகச் சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம் செய்யும் பரமமூர்த்தி, ஆதிகாரணன், ஆதி நாராயணன் நீ; சர்வவியாபி; விஷ்ணு நீ. ஜீவர்கள் முன்வினைப் பயன் ஓயப் பிறப்பெடுக் கிறார்கள். நீயோ காரணம் ஏதும் இன்றி மானுடனாக உன்னைப் பிறப்பித்துக்கொண் டாய். உன் மகிமைகளை அறியாது மூடர்கள் சண்டையிட்டுக்கொள்கிறார்கள். நீ பிரபஞ்ச மாகவும் அதில் விசேஷ அவதார புருஷனாக வும் தோன்றி வருவதையும் அதன் மகிமை என்ன, தாத்பரியம் என்ன என்பதையும் பக வானே, யாரும் அறியமாட்டார்கள். உனக்கு நண்பன் என்பவரும் விரோதி என்பவரும் இல்லை. உனக்கு விருப்பு வெறுப்பு இல்லை. நீ யாரையும் ஆதரிப்பதும் யாரையும் நிராகரிப்ப தும் இல்லை. இந்த ஜகத்தின் உயர் நாயகனே, உனக்குப் பிறப்பு இல்லை. நீ ஆதி அந்தம் அற் றவன். ஆயினும் நீர் வாழ்வனவற்றில் நீ மீனாக வும் விலங்குகளில் பன்றியாகவும் மானுடரில் ஸ்ரீராமனாகவும், ரிஷிகளில் நரநாராயணராக வும் அவதரித்தாய். உனக்குக் கடமை என்றோ, செய்தாக வேண்டும் என்றோ ஒன்றுமில்லை. உன்னைச் செயலில் தூண்டுவதற்கு யாதொன்று மில்லை. ஆயினும் நீ சிருஷ்டிக்கிறாய். கண்ணா, இது என்ன மாயை! விநோதம்! உன் மகி மையை யாரே அறிய வல்லார்! நீ கால னுக்குக் காலன். பயத்துக்குப் பயம் நீயே. ஆயினும் பால கோபாலா, நீ விளையாட்டுப் பிள்ளையின் விளையாட்டுத் தனத்தால் தயிர்ப் பானையை உடைத்து விட்டபோது உன் தாய் யசோதை உன் கைகளைக் கயிறுகொண்டு கட்ட வந்தபோது பயந்தவன் போன்றும் மனம் கலங்கியவன் போன்றும் காணப்பட்டாய். உன் கண்களில் வழிந்த கண்ணீர் தாய் கண் ணுக்கு இட்டிருந்த மையைக் கழுவி விட்டது. ஓ மாதவா, உன் மாயங்கள் எத்தனை? உன் மாயங்களால் எங்கள் மனங்கள் மோஹமடை கின்றன. இவ்வுலகம் உன் மாயையின் வசப் பட்டதாக மயங்கி இருக்கிறது. ஆகையால் உண்மையை உள்ளபடி காணமாட்டாதவர் களாய், உன் மகிமையான இந்த உன் திவ்ய அவதாரத்தை மனதுக்குத் தோன்றியவாறு தவறாக வியாக்கியானம் பண்ணுகிறார்கள். மலைய பர்வதத்தில் சந்தன மரம் வளர்ந்து அந்த மலைக்குப் பிரசித்தியையும், கீர்த்தியை யும் உண்டாக்குவது போன்று யதுகுலத் திலக மாய், பேராண்மைக் குணங்களையும், சீலங்களை யும், தர்மானுஷ்டானங்களையும் மாசுமருவற்ற யுதிஷ்டிரனின் புகழையும் பரப்பவே நீ தோன்றியுள்ளாய் என்று சிலர் சொல்கிறார் கள்.

"முன் ஜன்மத்தில் வசுதேவரும் தேவகியும் உன்னைத் தங்களுக்கு மகனாகப்பிறக்கவேண்டும் என்று வேண்டிக்கொண்டதாகவும் அவர்களின் பிரார்த்தனையை நிறைவேற்றுதல் பொருட்டே நீ தேவகி நந்தனாய், வசுதேவ சுதனாய்த் தோன்றி வந்து உலக நன்மையின் பொருட்டு அனேக அசுரர்களைச் சம்ஹரித்தாய்" என்று சிலர் சொல்கிறார்கள். கப்பலின் கொள்மானத் துக்கு அதிகமான பாரம் ஏற்றப்பட்டு அது கடலில் தத்தளிப்பது போன்று பூபாரத்தினால் அவதியுற்றவளாகிய பூமாதேவியின் பொருட் டுப் பிரம்மதேவன் உன் அவதாரத்தின் பொருட் டுப் பிரார்த்தித்தார். அவருடைய பிரார்த்த

னக்கு இணங்கி நீ அவதரித்துள்ளாய் என்றும் வேறு சிலர் சொல்கின்றனர். ஜீவர்கள் அறியாமை என்கிற மாயையினால் மூடப்பட்டு உலக ஆசைகளை நிறைவேற்றிக் கொள்ளுதல் பொருட்டு ஓயாது வினையாற்றுகின்றனர். அதன் விளைவாக ஓயாது இன்ப துன்பங்களை அனுபவிக்கிறார்கள். இது சங்கிலி போலக் காரணகாரிய வடிவெடுத்து முடிவில்லாத பிறப்பு இறப்பில் கொண்டு சேர்க்கிறது. இந்தப் பிறவிச் சுழலினின்று மக்களைக் கரையேற்றுவதற்கு நீ அவதரித்துள்ளாய் என்று பலர் சொல்கிறார்கள். உன் அவதார மகிமைகளை, லீலைகளை யார் பாடக் கேட்கிறார்களோ அவர்கள் அதனால் கவரப்பட்டுப் பிறகு தாங்களே பாடி மகிழ்கிறார்கள். அந்தத் தெய்வ ஆனந்தத்தால் மறுபடியும் மறுபடியும் பாடி மகிழ்கிறார்கள், உன்னைத் தியானித்திருக்கிறார்கள். தங்களைப் போன்ற பக்தர்களின் சகவாசத்தில் மகிழ்வடைகிறார்கள். அவர்களின் பக்தி இங்ஙனம் உறுதிப்பட்டு அவர்கள் உன் திருவடிகளை வந்தடைகிறார்கள், முக்தி பெறுகிறார்கள். 'உமது உற்றார் உறவினர்களுடைய துயர் துடைத்து விட்டோம். அவர்களின் பிரார்த்தனையை நிறைவேற்றி விட்டோம் என்று கருதி நீங்கள் இப்போது எங்களை விட்டுப் பிரியலாகாது. நாங்கள் உன் உறவினர்கள் மட்டுமல்லர்; உன் அடைக்கலப் பொருள் நாங்கள். நீயே எங்களுக்குக் கதி. குறிப்பாக இப்போது யுத்தத்தில் ஏற்பட்டுள்ள பல ராஜகுடும்பங்களின் அதிருப்தியைச் சமாளிக்க வேண்டிய நிலையில் நாங்கள் உள்ளோம். உன்னைத் தவிர எங்களுக்கு வேறு புகலிடம் ஏது? கதி ஏது? ஆறுதல் ஏது ?

"யாதவர்களும் என் மக்கள் ஐவரும் உத்தம வீரர்கள் என மூவுலகிலும் புகழ் பெற்றுள்ளார்கள். இவர்கள் இப்போது உயிருடன் வாழ்ந்திருக்கிறார்கள். ஆனால் அவர்களுக்கு உன்னை அன்றிப் பலமோ தைரியமோ சௌபாக்கியமோ இல்லை. நீ இல்லாவிட்டால் நாங்கள் பலஹீனர்களாகவும் ஒன்றுமில்லாதவர்களாகவும் ஆகிவிடுவோம். ஓ கதாதரா, துவஜம், வஜ்ரம், அங்குசம் ஆகிய தெய்விகக் குறிகளைத் தாங்கியுள்ள உன்னுடைய திருவடிகள் எங்களுடைய இந்தப் பரந்த ராஜ்யத்தில் பட்டுச் சீரும் சிறப்பும், மங்களமும் பொருந்தியது ஆகவேண்டும். நீ போய்விட்டால் அதன் சௌபாக்கியங்கள் எல்லாம் போய்விடும். நகரங்கள் லக்ஷ்மிகடாக்ஷம் பொருந்தியவையாகவும் செடிகொடிகள், மரங்கள் ஆகிய ஸ்தாவரங்கள் யாவும் அவ்வவற்றின் பருவகாலத்தில் இனிய பழங்களையும் நறுமணம் நிறைந்த மலர்களையும் காய்களையும் ஏராளமாகத் தருபவைகளாகவும் மலையும் வனமும் செழித்தும் ஏரிகள் நீர் நிறைந்தும், காட்சிக்கு இனிமையாக அமைந்திருப்பதும் உன்னுடைய சான்னித்தியத்தாலேயே ஆகும். உன்னை நான் என்றுமே எங்களுடன் இருக்கும்படி வேண்டிக் கொள்ளவும் முடியாது. யாதவர்களும் எங்களுக்கு உயிரான உறவினர்கள். அவர்கள் உன் பிரிவைக் குறித்துப் படும் வேதனையை, மனத்துயரங்களை நினைத்தாலே அதுவும் எனக்கு வேதனை தருகிறது. ஆயினும் கண்ணா, நீ புறப்பட்டுப்போனதும் எங்களுக்கு கரையற்ற துயரங்கள் நிச்சயம் சூழ்ந்துகொள்ளும். ஆகையால், பிரபோ, இந்த என் மயக்கத்தை, இரண்டு பக்கமும் நினைந்து வருந்தும் நிலைமையை நீயே விடுவித்தருள். யாதவர்களிடத்தும் பாண்டவர்களிடத்தும் நான் கொண்டுள்ள பற்றுதலை, பாசத்தை நீ விலக்கி அருளமாட்டாயா! அது உனக்கு அருமையோ! இந்த மன மாசு நீங்கினால் நான் ஒரே மனதாய், முழுமனதாய் இடையறாது உன்னிடத்துப் பக்தி பண்ண முடியும்; உன்னைக் குறித்து தியானிக்கமுடியும். கங்கை நதியானது இடையறாது கடலை நோக்கிப் போய்க்கொண்டிருப்பதுபோன்று என் மனது எதைக்குறித்தும் சிதறாமல் உன்னையே நாடி நிற்கும். ஓ கண்ணா, பார்த்தசாரதியே, விருஷ்ணிகளின் தலைவனே, யோகேஸ்வரா, ஜகந்நாதா, இறைவனே நான் மீண்டும் மீண்டும் உன்னை வணங்குகிறேன். யாதவர்களில் சிறந்தவனே, இவ்வுலகுக்கு இடையூறாய், சாபக்கேடாய் இருக்கும் க்ஷத்திரியப்பதர்களை நீ அழித்திடுவாயாக. அதனால் உன்பலம் ஒருநாளும் குறையாது. வற்றாத செல்வ ஊற்றுக்களாகிய காமதேனுவும் கற்பக விருக்ஷமும் உன் உடைமைகள். தேவர்களின், நல்லவர்களின் துயரங்களைத் துடைப்பதற்கே நீ அவதரிக்கிறாய்."

# விவேகானந்தரின் சிந்தனைகள்

( திருச்சி வானொலி நிலையத்தில் 24—1—83 அன்று ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர் அவர்கள் நிகழ்த்திய உரை )

நரசேவை

மனிதன் தன் சகோதரனுக்குச் சேவை செய்வதை மறந்துவிட்டான். சகோதரனுகிய மனிதனைப் புறக்கணித்துவிட்டுச் சிற்றுயிர்களாகிய புழு, பூச்சி, ஈ, எறும்பு விலங்குகளுக்குச் சிறு உதவிகளைச் செய்வதைப் பெரிய சேவை என்று கருதி வருகின்றுன். மக்கள் பசியால் வாடிக்கிடக்க அவர்களுக்கு உதவி செய்வதைக் கருத்தில் கொள்ளாது எறும்புக் குழியைத் தேடிக்கொண்டுபோய் அதில் அரிசி போடுவதைப் புண்ணியச் செயல் என்று எண்ணுகின்ற மக்கள் இருக்கின்றனர். நரசேவை புறக்கணிக்கப்பட்டிருந்ததைப் பார்த்த சுவாமி விவேகானந்தர் நரசேவைக்கு முக்கியத்துவம் கொடுத்தார். மக்களுக்குச் செய்கின்ற சேவையே மகேசுவரனுக்குச் செய்கின்ற சேவையாகும் என்று கூறினர். அவர் வாழ்க்கையில் நிகழ்ந்த ஒரு சம்பவத்தை ஈண்டு எடுத்துக்கொள்வோம்.

கோ ரக்ஷக சபை ஒன்றைச் சேர்ந்த ஒருவர் ஒரு சமயம் சுவாமி விவேகானந்தரிடம் வந்தார். கிழட்டுப் பசுக்களையும், கசாப்புக்கடைகளினின்றும் மீட்டு எடுத்த பசுக்களையும் பசுமடங்களில் வைத்துப் பரிபாலிப்பது அந்தச் சங்கத்தின் நோக்கமாகும். தங்கள் சங்கத்துக்குச் சுவாமிகளின் செல்வாக்கைப் பயன்படுத்திப் பணம் திரட்ட வேண்டும் என்று சுவாமிகளிடம் வந்திருந்தார். சுவாமிகளிடம் தான் வந்த கருத்தையும் வெளியிட்டார். சுவாமிகள் அப்பொழுது அவரை ஒரு கேள்வி கேட்டார். மத்திய மாகாணத்தில் சுமார் ஒன்பது லக்ஷம் மக்கள் பஞ்சத்தால் மடிந்து போனுர்கள். அம்மக்களுக்காக அவர்கள் சங்கம் என்ன முயற்சி எடுத்துக்கொண்டது என்று கேட்டார். "மக்கள் தங்கள் ஊழ்வினையின் பயனுக மடிந்து போனுர்கள். அவர்களுக்கு நாங்கள் ஏன் உதவிபுரியவேண்டும்?" என்று கோ ரக்ஷக சபையைச் சேர்ந்த அன்பர் கூறினர். "மாடுகள் வெட்டுண்டு சாவது ஊழ்வினையினுல் என்று ஏன் பகரக்கூடாது?" என்று சுவாமிகள் கேட்டார். "பசுவைக் கோ மாதா என்று சாஸ்திரங்கள் பகர்கின்றன. மாதாவைப் பரிபாலிப்பது நம் கடமை அல்லவா?" என்றுர் அன்பர். "உண்மைதான். உங்கள் போன்ற புத்திசாலிகளைக் கோமாதாவன்றி எந்த மாதாதான் பெற்றெடுப்பாள்" என்று கூறி அவரை அனுப்பிவிட்டார். நரசேவைக்கு முக்கியத்துவம் கொடுப்பதுதான் அவர் ஸ்தாபித்த இராமகிருஷ்ண சங்கத்தின் முக்கிய நோக்கமாகும். கடவுளை அடைய விரும்புவது போன்று கடவுளின் குழந்தைகளாகிய உலக மக்களுக்குச் சேவை செய்யவும் வேண்டுமென்ற நோக்கத்துடன்தான் சுவாமிகள் இராமகிருஷ்ண இயக்கத்தைத் தொடங்கினர்.

விவேகானந்தரிடம் மக்களுடைய கஷ்டத்தை எடுத்து இயம்பினல் அவருடைய உள்ளம் உருக ஆரம்பித்துவிடும். அவருடைய கருணை உள்ளத்தை அறிய வேண்டுமென்று ஸ்ரீராமகிருஷ்ணரின் இல்லறச் சீடராகிய கிரீஷ் சந்திரகோஷ் விரும்பினர். ஒரு சமயம் விவேகானந்தர் ருக் வேதம் படித்துக்கொண்டிருந்தார். அப்போது கிரீஷ்சந்திரகோஷ் அவரிடம் வந்தார். விவேகானந்தர் கிரீஷரைப் பார்த்து "நீ வேதம் படிக்கக் கூடாதா?" என்று கேட்டார். அதற்குக் கிரீஷ்சந்திரகோஷ் "உங்கள் வேதத்துக்கு எட்ட நின்றுகொண்டு ஒரு வணக்கம் செய்கின்றேன்" என்றுர். உலகில் விதவைகள்படுகின்ற வேதனைகளையும், அனுதைகள் படுகின்ற அல்லல்களையும், ஏழைகள் படுகின்ற துயரங்களையும் உருக்கமாக எடுத்துச் சொல்லி, "உங்கள் வேதம் இவர்களுக்காக என்ன செய்திருக்கிறது?" என்று அவர் கேட்டார். அவருடைய உருக்கமான வர்ணனைகளைக் கேட்டதும் விவேகானந்தருடைய உள்ளம் உருகியது அவருடைய கண்களில் நீர் ததும்பியது. புத்தகத்தை மூடிவைத்துவிட்டுத் தனியாக ஓர் இடத்தில் அமர்ந்து மக்களுடைய அல்லல்களைக் குறித்து நைந்து உருகிக் கண்ணீர் சிந்தினர். ஞானம் என்பது கல்நெஞ்சம் படைத்திருப்பது அன்று என்று அவர் பன்முறை பகர்ந்திருக்கின்றுர்.

1898ஆம் ஆண்டு கல்கத்தாவில் பிளேக்

என்னும் கொடிய நோய் பரவி அதற்கு மக்கள் பலியாயினர். அந்நோயால் பிடிக்கப்பட்டவர்களை அப்படியே போட்டுவிட்டு உற்றார் உறவினர்கள் தங்கள் உயிர்களைக் காப்பாற்றிக் கொள்வதற்கு வேறு இடங்களுக்குச் சென்று குடியேறினர்கள். பிளேக்கினல் பீடிக்கப்பட்டவர்களின் பரிதாபகரமான நிலைமையைக்கண்டு விவேகானந்தர் மனம் இளகினர். அந்நோயாளிகளைக் காப்பாற்றுவதற்கு அவரும், அவருடைய குருசகோதரர்களும் தங்கள் உயிரை அர்ப்பணிக்க ஆயத்தமாக நிவாரண வேலையைத் துவக்கினர்கள். அத்திருப்பணிக்குப் போதுமான பணம் ஆரம்பத்தில் அவர்களுக்குக் கிடைக்கவில்லை. அப்பொழுது தாம் மடம் கட்டுவதற்கென்று வாங்கியிருந்த நிலத்தை விவேகானந்தர் விற்பதற்கு முன்வந்தார். ஆனல் நிலத்தை விற்பதற்கு முன்பே போதிய பணம் சேர்ந்துவிட்டது. விவேகானந்தரும் அவருடைய குரு சகோதரர்களும் பிளேக் நோயாளிகளுக்கு அன்புடன் செய்த பணிவிடையானது அரசாங்கத்தையும், நாட்டு மக்களையும் வியப்பில் ஆழ்த்தியது. மக்களுக்கு என்ன செய்யவேண்டும் என்பதைச் சுவாமி விவேகானந்தர் செயல் மூலமாகவே விளக்கிக் காட்டினர்.

சுவாமி விவேகானந்தர் காலத்தில் அமெரிக்காவின் முக்கிய நகரமாகிய சிக்காகோ நகரில் சர்வமத மகாசபை ஒன்று நிகழ்ந்தது. இந்து மதத்தின் பிரதிநிதியாகச் சுவாமி விவேகானந்தர் அங்கு அனுப்பப்பட்டிருந்தார். அந்தச் சபையில் அவர் பேசிய பேச்சு சபையோர்களை முற்றிலும் கவர்ந்துவிட்டது. அப்பேச்சுக்குப் பிறகு உலகமே அவரைப் புகழ ஆரம்பித்தது. சர்வமத மகாநாடு முடிந்த பின்பு சுவாமி விவேகானந்தர் தங்குவதற்கு ஒரு மாளிகையை ஏற்பாடு செய்திருந்தார்கள். அம்மாளிகை பூலோக சொர்க்கம் போன்று அமைந்திருந்தது. அம்மாளிகையில் அன்று இரவு அவர் தங்கியிருந்தபொழுது அவர் உள்ளத்தில் இந்திய மக்களினுடைய ஏழ்மையைப் பற்றிய எண்ணம் உதித்தது. உள்ளத்தில் துயரம் மேலிட்டவராக இரவு முழுவதும் உறங்காது இந்தியாவின் ஏழ்மையை நினைந்து நினைந்து கசிந்துருகி வருந்தினர். 'கொடும் பசியை ஆற்றுவதற்கு அன்னம் இல்லாது இந்தியாவில் ஆயிரக்கணக்கான மக்கள் மடிந்து கொண்டு இருக்கின்றனர். இந்திய மக்களுடைய நிலை இந்நாட்டு மக்களுடைய நிலையைப் போன்று உயர்வது எப்பொழுது' என்று எண்ணியெண்ணித் துயரப்பட்டார். பாரத நாடு பழம் பெருமையை மீண்டும் எய்தும் காலம் எப்பொழுது வரும் என்று அவருடைய உள்ளம் சதா எண்ணிக்கொண்டிருந்தது. நரசேவையை நாராயண சேவையாகச் செய்ய வேண்டுமென்று சுவாமி விவேகானந்தர் வற்புறுத்தினர். நரசேவைக்கு முக்கியத்துவம் கொடுத்திருந்த அவருடைய வாழ்க்கை நிகழ்ச்சிகளைப் பார்த்தோம். நரசேவையில் தீவிரமாக ஈடுபட்டு விவேகானந்தரின் தொண்டர்கள் ஆவோமாக.

---

## விஞ்ஞான உலகம்

ஆங்கிலக் கல்வி முறையில் படித்திருந்த நண்பனிடம் ஒரு மனிதன் கூறியதாவது: "நண்பா! வீடு ஒன்று பயங்கரமான சப்தத்துடன் இடிந்து விழுந்ததை நான் வழியில் பார்த்து வந்தேன்." "அப்படியா! சிறிது பொறும்; நான் செய்தித்தாளைப் படித்து விட்டு வருகிறேன்" என்று அவன் செய்தித்தாளைப் புரட்டிப் புரட்டிப் படித்துப் பார்த்தான். வீடு விழுந்த செய்தி ஒன்றும் செய்தித்தாளில் காணப்படவில்லை. "செய்தித்தாளில் இல்லாத ஒரு விஷயத்தை நம்ப முடியாது" என்றான் அந்நண்பன். இந்த நண்பன் போன்று இன்றைய மனிதன் 'விஞ்ஞானத்தில் உள்ளதைத்தான் நம்புவேன்' என்கின்றான். மெய்ஞ்ஞானிகள் தங்கள் அனுபவத்தில் கண்ட உண்மைகள் விஞ்ஞான அறிவுக்கும் எட்டாத உண்மைகளாகும். அவ்வுண்மைகளை நவீன மனிதன் ஏற்றுக்கொள்ள மறுக்கிறான். விஞ்ஞானத்தின் முடிவு மெய்ஞ்ஞானத்தின் ஆரம்பம் என்பதை நாம் அறிந்துகொள்ள வேண்டும்.— ஸ்ரீ ராமகிருஷ்ணர்

# குட்டித் திருவாசகம்

( வித்துவான் ஆதி. பாலசுந்தரன் M. A. )

பகுத்தறிவு உடைய மானிடர்களுக்கே வீடு பேறு அடைய வேண்டும் என்னும் ஞானம் தோன்றும்.

எங்கோ அந்தகாரப் பெருவெளியில் உழன்று கொண்டிருக்கும் ஆன்மாவாகிய உயிரின்மீது இரக்கம் கொண்டு, அந்த ஆன்மா நல்லகதி அடையவேண்டும் என்னும் பேருள்ளம் கொண்டு, அந்த உயிர் செய்துள்ள வினைகளுக்கு ஏற்றவாறு உடம்பைப் பெற வைக்கிறான் இறைவன்.

மனித உடம்பு பெற்ற உயிர், நல்வினை காரணமாகத் தான் நற்கதிஅடையும்பொருட்டு இறைவன் திருவடியை நாடுகிறது. திருவடியை நாடுவதற்கு ஞானம் உறுதுணையாக அமைகிறது.

சூரியன் தனது ஒளியை நேரே வெளிப்படுத்துவதும் உண்டு; சந்திரன்மூலம் வெளிப்படுத்துவதும் உண்டு. சூரியன், தான் மறைந்திருந்து சந்திரன் மூலம் ஒளியை வெளிப்படுத்துவது போன்று, சிவபெருமான் தன்னை மறைத்து ஞானச்சாரியன் மூலம் ஆன்மாவிற்கு அருள் பாலிக்கிறான். இதற்குப் பொதுத் தன்மை என்று பெயர்.

சூரியன் நேரே ஒளி வீசுவதுபோன்று, இறைவனே நேராக ஞானம் வழங்குதலும் உண்டு. இதற்குச் சிறப்புத் தன்மை என்று பெயர். இருப்பினும், உயிர் வேறு; தான் வேறு என்னும் நிலை இல்லாமல் தானும் உயிரும் ஒன்றாகவே இருப்பது ஒன்றாய நிலை. உயிருக்கு வேறாக இருந்து அருளுவது வேறாய நிலை. உயிரோடு உடன் இருந்து உதவுவது உடனாய நிலை. இவ்வாறு உயிருக்கு உதவுதல் இறைவனின் பொதுவான இயல்பு ஆகும். இறைவன், தன்னையும் யார் என்று உயிருக்குக் காட்டுகிறான். உயிர் எப்படிப்பட்ட இயல்பு உடையது என்பதையும் விளக்கிக் காட்டுகிறான். இவ்வாறு இறைவன் இரண்டையும் விளக்கி ஒளி மயமாய் நிற்கிறான். இப்படி நிற்பதைத் திருவடி ஞானம் அல்லது பதிஞானத்தால் மட்டுமே காண முடியும்.

"ஆண்ட குரவன் ஆவான்" என்று சிவபெருமானை அதிவீரராமர் குறிப்பிடுகிறார். ஒளி மயமாய் நின்று அவருக்குப் பதிஞானம் வழங்கியவன் இறைவன். குருவின் உபதேசப்படி நின்றால் யாவற்றையும் உணரலாம். இறைவனுடைய திருவடியைப் பற்றுக்கோடாகப் பற்றி நிற்கவேண்டும். எல்லாப் போகங்களையும் வெறுக்கவேண்டும். காண்பன எல்லாம் உண்மையல்ல என்று உணர வேண்டும்.

இவ்வாறு, குரு உபதேசக் காட்சியால், பதிஞானம் கைகூடப்பெற்று இறைவனால் ஆட்கொள்ளப்பட்டவர் அதிவீரராமர்.

சிவபெருமானே குருவடிவமாக எழுந்தருளி வந்து பக்குவம் வாய்ந்த ஆன்மாக்களுக்கு அருள் செய்கிறான் என்பது ஆன்றோர் முடிவு.

"மான் காட்டி மானை ஈர்க்கும் கொள்கை என அருள்மௌன குருவாய் வந்து" என்னும் தாயுமான சுவாமிகள் அருள்வாக்கு இங்கே கருதத் தக்கது.

"அல்லல் பிறவி அறுப்பானை"— துன்பம் தருகின்ற பிறவியை அடியோடு அழிப்பவனை என்கிறார். பிறவி, துன்பம் தரக்கூடியதா? ஆம். துன்பம் தரக்கூடியதுதான். "மானுப் பிறப்பு" இன்பம் இல்லாத பிறப்பு என்பார்கள்.

உலகியல் நிலையில் அதாவது லௌகிக நிலையில், உலகத்தில் பிறந்து துன்பப்படுவதும் உண்டு. போதுமான செல்வ வசதி இல்லையே! இருப்பிட வசதி கிடைக்க வில்லையே! பிற வசதிகள் கிடைக்கவில்லையே! என்று எண்ணுவதும், உடலுக்கு வருகின்ற பலவித நோய்களும் ஆக இவையெல்லாம் உலகியல் நிலையில் ஏற்படுகிற துன்பங்கள் ஆகும்.

வினைப்பயனை அனுபவிப்பது பல பிறவிகளிலும் தொடர்ச்சியாக வந்து அமைகின்றது. வினைப்பயன் பல பிறவிகளிலும் தொடர்ந்து வருகிறது. மறுபிறவி உண்டு என்று நம்புகின்றவர்கள் நாம்.

எப்படிப் பார்த்தாலும் சரி, பிறவி என்பது துன்பம் நிறைந்ததுதான்.

சரி, அந்த அல்லல் நிறைந்த பிறவியை அறுத்து, இல்லாமல் ஒழிப்பவன் யாவன்? நம் பெற்றோரா? நம் உடன் பிறந்தவரா? நம்

சுற்றத்தார்களா? இவர்கள் யாராலும் நம் பிறவியை வேரறுக்க இயலாது. இவர்களுக்கே பல பிறவிகள் உண்டே!

அப்படியானல், பிறப்பும் இறப்பும் இல் லாத சாவா மூவாப் பேரறிவாளன் ஆகிய இறைவனே பிறவிப் பிணிக்கு அருமருந்து ஆவான்.

இந்தப்பாடலில் முந்தின வரியில் அதிவீர ராம பாண்டியர் மிக மிக அழகாகக் கூறு கிறுர் ''ஆண்ட குரவன்'' என்று. இறைவனை 'ஞானுச்சாரியன்' என்கிறுர். இறைவனே குரு வாக வந்து உபதேசம் செய்து அடிமையாக் கிக்கொண்டார் என்று சொல்லுகிறுர்.

நல்ல அனுபவம் உடையகுருவின் இடத்தில் உண்மைப் பொருளைக் கேட்டு உணர்ந்தவர் களுக்கு மறு பிறப்பு இல்லை.

இதற்கு ஆதாரம் உண்டா? உண்டு. எல் லாம் தெரிந்த ஞானி தெய்வப் புலவர் திரு வள்ளுவர். அவர்,

''கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி'' என்கிறுர்.

"இம்மக்கள் பிறப்பின் கண்ணே உபதேச மொழிகளை அனுபவம் உடைய தேசிகர் பால் கேட்டு அதனுல் மெய்ப்பொருளை உணர்ந்தவர், மீண்டும் இப்பிறப்பின் கண் வராத நெறியை எய்துவர்" என்று பரிமேலழகர் விளக்கம் சொல்லுகிறுர்.

கற்று என்பதற்குக் கேட்டு என்று எழுது கிறுர். யாரிடத்தில்? அனுபவம் மிக்க தேசிக ராகிய குருவின் இடத்தில். அப்படி மெய்ப் பொருளை உணர்ந்ததால் என்ன பயன்? திரும் பவும் பூமியில் பிறக்க வேண்டியது வராது. அதற்கு மேலும், வீட்டு நெறியாகிய மோட் சத்தை அடையலாம். இவ்வாறு திருக்குறளில் அனுபவ உண்மை சொல்லப்படுகிறது.

இந்த உண்மையை அதிவீர ராமபாண்டியர், 'சிவபெருமான், என்னை ஆட்கொள்கின்ற குரு வாக ஆகக் கூடியவன்; என் பிறவியைவேர் அறுக்கக் கூடியவன்' என்று குறிப்பிடுகிறுர்.

குருவிடம் கேட்ட உபதேச மொழிகளை எவ் விதச் சந்தேகமும், மாறுபாடும் இல்லாமல் தெளிவாக உணர்ந்து ஒருவன் பரம்பொருளை உணர்வானுகில், அவனுக்குப் பூமியில் வந்து பிறக்கக்கூடிய பிறவி இல்லை என்பது அனு பவம் மிக்க ஆன்ருேர்களின் துணிவு ஆகும்.

"வேண்டும் பதவி தருவானை"—அடியார் களாகிய அன்பர்கள் விரும்புகின்ற பதவியைத் தந்தருளுபவன் சிவபெருமான் என்கிறுர்.

இறைவன் குருவாக அமைந்து உபதேசிப்ப தால் ஏற்படும் பயன், பிறவி அறுபடுதல். பிறவி அறுபடுவதால் ஏற்படும் பயன், விரும்பு கின்ற பதவியைப் பெறுதல்.

பிறவி என்பது இல்லாமல் போனுல், உயிர் கள் சாலோகம், சாமீபம், சாரூபம் என்று ஆன்ருேர்கள் கூறுகின்ற பதவிகளை அடையும்.

இறைவன் எழுந்தருளியிருக்கும் உலகத்தை ஆன்மா அடைவது சாலோகம் எனப்படும்.

இறைவனுக்கு அருகிலே ஆன்மா ஆகிய உயிர் செல்லுவது சாமீபம்.

இறைவனுடைய ரூபத்தையே — வடிவத் தையே பெறுதல் சாரூபம் எனப்படும்.

அசேதனமாக, உருவம் உடையதாக, அநித்ய மாக இருப்பது உடம்பின் இயல்பு. சேதன மாக, அருவமாக,நித்தியமாக இருப்பது உயிர். ஏதோ வினைவசத்தால், உடம்பிலே வந்து கூடுகிறது உயிர். அவ்வாறு தோற்றத்திற்கு வந்துசேர்கிற ஆன்மா, குருவின் அருள் கருணை யால்பிறவாப் பெருநிலையைஅடைகிறது.

இந்த மனித உடம்போடு இருக்கிற வரை யிலும் மயக்கமாகிய அறியாமை இருக்கத் தான் செய்யும். தேசிகராகிய குருவினிடத் துப் பெறுகின்ற உறுதிமொழிகளால் யான், என்பதையும், எனது என்பதையும் அறவே நீக்கிவிடலாம்.

"தந்தை தாயும் நீ, என் உயிர்த் துணையும் நீ, சஞ்சலமது தீர்க்க வந்ததேசிக வடிவு நீ" என்கிற தாயுமான சுவாமிகள் வாக்கு இங்கே நினைக்கத் தக்கது.

இறைவனே தேசிக [ஆச்சாரியன்] வடிவின ஞக வந்து, அருள் உபதேசம் செய்து பிறவிச் சஞ்சலத்தை ஒழிக்கிறுன்.

அதிவீரராம பாண்டியர் உலக நிலையா மையை உணர்ந்தார். உலகப் பற்றுகளை அறவே ஒழித்தார். சிவனை நினைந்தார். சிவத் தியானம் செய்தார். சிவனே அவருக்குக் குரு வாக வந்து வாய்க்கும் குருவருளும், திருவரு ளும் வாய்த்தன.

அவருக்கு இருந்த மன உறுதியின் விளைவாக, "வேண்டும் பதவி தருவானை" என்று துணிவுடன் கூறுகிறார்.

"வெளிநாட்டு இன்பம் அளிப்பானை" என்று அதிவீரராம பாண்டியர் இயம்புகிறார்.

மோட்ச இன்பத்தை அருளுபவன், பெண்ணின் நல்லாளொடும் பெருந்தகையால் வீற்றிருக்கும் பிறவா இறவாப் பேரருளாளன் சிவபெருமான்.

மோட்ச இன்பத்தை இறைவன் அருள்வானா? இதற்கு ஆதாரம் உண்டா? ஆன்மாக்களுக்கு மோட்ச இன்பத்தை நிச்சயம் இறைவன் அருள்வான். இதற்கு ஆதாரம் உண்டு.

"பற்று அற்ற கண்ணே பிறப்பு அறுக்கும்" —என்பது திருவள்ளுவர் வாக்கு. ஒருவன் அகப் பற்று, புறப் பற்று ஆகிய இரண்டு வகைப் பற்றுக்களையும் அறவே நீக்கிய சமயத்திலே, பிறப்பை அறுத்துவிடுவான்; அவ்வுயிர் கட்டறுத்து வீடு பெறும்.

"அற்றது பற்று எனில் உற்றது வீடு" —என்பது திருவாய்மொழி. பற்று நீங்கினால் வீடு பேறு அடையலாம்.

நாயன்மார்கள், ஆழ்வார்கள், மாணிக்கவாசகர் இவர்கள் எல்லாரும் மோட்ச சாம்ராஜ்யம் அடைந்தவர்கள் அல்லரோ?

நமக்கு முன்னால் வாழ்ந்த நாயன்மார்கள், ஆழ்வார்கள் முதலான பெருமக்கள் பற்றற்று வாழ்ந்தார்கள்; அவர்களுக்கு மோட்சம் கிடைத்தது என்ற அனுபவத்தை, அவர்கள் வாழ்ந்துகாட்டிய வாழ்க்கையை, அவர்களுக்குக் கிடைத்த பேற்றை உணர்ந்தவர் அதிவீரராம பாண்டியர்.

அந்த நான்குபேர் காட்டிய நன்னெறியிலே நடந்தவர் அதி வீரராம பாண்டியர். அகப்பற்று, புறப்பற்று ஆகிய பற்றுக்களைத் துறந்து வாழ்ந்தார். சிவன் அடியைச் சிந்திக்கும் திருப்பெருகும் சிவஞானம் வாய்க்கப் பெற்றார். அந்த மன உறுதியில் மோட்ச உலகம் அளிப்பான் என்று கூறுகிறார்.

விளக்கில் உள்ள திரியைத் தூண்டுதல் வேண்டும். தூண்டுதல் இருந்தால்தான் துலங்கும். இறைவனை ஜோதியாகக் கூறுவார்கள். சுடராக இயம்புவார்கள், ஒளி விளக்காகச் சொல்லுவார்கள். "சோதியே சுடரே சூழ் ஒளி விளக்கே" என்று ஆண்டவனைச் சான்றோர்கள் குறிப்பிடுவார்கள். ஆன்மாக்கள் பெற்றிருக்கிற பக்குவநிலைக்கு ஏற்ற பிரகாரம் ஜோதியாகக் காட்சி தருவான்; சுடராகப் பிரகாசிப்பான். ஒளிவிளக்காகச் சுடர் விடுவான் இறைவன்.

ஆன்மாக்களின் அறியாமையாகிய இருள் நீங்கும்படி, இரத்தின மணிகள் சூழ்ந்து விளங்குகின்ற திருச்சிற்றம்பலத்தில் ஞானப் பிரகாசமாய், பிறவியை வேரறுக்க ஆனந்தத் தாண்டவம் புரிகின்றான் எம்பெருமான்.

உலகத்தில் உள்ள விளக்குகள் எல்லாம் மனிதரால் படைக்கப்பட்டவை. எனவே அவற்றிற்குத் தோற்றமும் உண்டு; அழிவும் உண்டு. தூண்டுதல் இருந்தால்தான் சுடர் விட்டுப் பிரகாசிக்கும்.

இறைவனாகிய தூண்டாமணி விளக்கு யாராலும் படைக்கப்படாதது. தோற்றமும், கேடும் கிடையாது.

தொழில் மூன்று இயற்றும் தொல்லோன், படைத்தல், காத்தல், அழித்தல் [சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம்] ஆகிய மூன்று தொழில்களையும் இடையறாது இயற்றுகின்ற பழைமையானவன் எம்பெருமான் சிவபெருமான்.

சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் ஆகிய மூன்று தொழில்களோடு திரோதானம் [மறைத்தல்], அனுக்ரஹம் [அருள்தல்] ஆகிய இரண்டு தொழில்களையும் சேர்த்து ஐந்தொழில்களை [பஞ்சகிருத்தியங்கள்] இறைவன் இயற்றுகின்றான் என்று சொல்லுவதும் உண்டு.

பிரபஞ்சப் பொருள்களைச் சிருஷ்டிப்பவன் [படைப்பவன்] சிவபெருமான்.

படைத்த எல்லாவற்றையும் அவனே காக்கின்றான். [ஸ்திதி]

படைத்த எல்லாவற்றையும் உரிய காலம் வரும் போது அழிப்பது ஸம்ஹாரம்.

ஆன்மாக்களுக்கு இறைவனை உணரும் பக்குவம் அமைகின்ற காலம் வரும் வரையிலும் இறைவனைப்பற்றியஉண்மைகளை மறைப்பது திரோதானம்.

ஆன்மாக்கள் பக்குவம் அடைந்ததும் அவற்றினுடைய மறைப்பை நீக்கித் தன்னை உணருமாறு இறைவன் செய்வதே அருளல் ஆகும்.

# குறிப்புகள்

## சக்தி சங்கப் பயிற்சி முகாம்

விருதுநகர் தாய்மார்கள் அமைத்துள்ள சக்தி சங்கம் கோடை விடுமுறையில் மாணவிகளுக்கு வாழ்க்கைப் பயிற்சி (ஆத்மீகப் பயிற்சி முகாம்) சிறந்தமுறையில் ஆண்டுதோறும் தருகின்றது.

இந்த ஆண்டு 1983ல் மே 5, 6, 7 தேதிகளில் மேற்கண்ட பயிற்சி நடந்தது. அறுபத்தேழு சிறுமியர் இதில் சேர்ந்து பயிற்சிபெற்றுச் சென்றனர். மே மாதம் 4ஆம் தேதி இரவில் பயிற்சி பெறுவதற்கு வந்த அனைவரும் முகாம் நடந்த U. M. ஞானசபாபதி நாடார் கல்யாண மண்டபத்திற்கு வந்து சக்தி சங்கத் தலைவியைச் சந்தித்துத் தங்கள் பெயரைப் பதிவு செய்துகொண்டனர். தங்கள் படுக்கை,சாமான்களைக்குறித்தஇடத்தில்வைத்தனர். சிவகாசி, அருப்புக்கோட்டை, மதுரை, தூத்துக்குடி, கோவில்பட்டி, விருதுநகர் ஆகிய ஊர்களிலிருந்து அவர்கள் வந்திருந்தார்கள்.

உணவு, இட வசதிக்காக ரூ. 15-00 கட்டினார்கள். ஊர், பெயர் அறிமுகப்படுத்திச் சிறுமியர்கள் ஐந்து குழுக்களாகப் பிரிக்கப்பட்டனர். அகல்யா, அனுசூயா, ருக்மணி, சீதா, ரேணுகா என அக்குழுக்களுக்குப் பெயரிடப்பட்டன. பயிற்சியாளருக்கு முன்னுரை என்னும் அறிவுரையில் கூறப்பட்ட கருத்துக்களாவன:

இந்த வாழ்க்கைப் பயிற்சியின் திட்டம் நாளுக்கு ஒருசீரிய கருத்தைக்கொண்டு மாணவிகளுடைய எண்ணம், பேச்சு, செயல் மூன்றும் அமையவேண்டும் என்பதாகும். காலத்தை வீணாக்காது ஒவ்வொரு நிமிடத்தையும் நன்கு பயன்படுத்த வேண்டும். கட்டுப்பாட்டுடனும், குறித்தநேரம் தவறாமலும் தம் குழுவுக்குத் தரப்பட்ட கடமைகளில் ஒற்றுமையுடன் ஈடுபடவேண்டும். உடல், உடை,உடைமை,தங்குமிடம் ஆகியவற்றைச் சுத்தமாக வைத்துக்கொண்டு செயல்படவேண்டும். பயிற்சி பெறுபவர்களுக்குக் கொடுக்கப்பட்ட தலைப்புகள்: (1) கிராமப் பணி (2) நாட்டுப்பணி (3) தெய்வப்பணி. இவை முறையே 5, 6, 7 தேதிகளுக்குரிய கருத்துக்களாகும். இங்கே பயின்ற நற்பண்புகள் வாழ்க்கை முழுதும் கடைப் பிடித்து ஒழுகக் கூடியவை என்று கூறப்பட்டு அறிவுரை நிறைவுற்றது. சிறுமியர் தம் தங்குமிடத்தைத் தெரிந்துகொண்டு உணவு அருந்திப் படுக்கைக்குச் சென்றார்கள். அன்றாட நிகழ்ச்சிகள் காலம் குறிப்பிட்டு எழுதிப்போடப்பட்டிருந்தன. 5ஆம் தேதி காலை 4-30 மணிக்குச் சிறுமியர் நீராடி, திலகமிட்டுப் பிரார்த்தனைக்குக் கூடினர். திருப்பள்ளி எழுச்சியுடன் பிரார்த்தனை தொடங்கியது. 5-30 மணிக்கு ஐந்து குழுவினரும் அணிவகுத்துநின்று சக்தி சங்கக்கொடியை ஏற்றினார்கள்.கொடி வணக்கம் செய்தபின் அன்றைய சிந்தனைக்கு மையமான கருத்து கிராமப்பணி என்றும், எங்ஙனம் அதைச் செயல்படுத்தப்போகிறார்கள் என்றும் கூறப்பட்டது. சரியாக ஆறு மணிக்கு முகாமில் அனைவரும் குள்ளூர் சந்தை என்னும் நான்கு கி. மீ. தொலைவிலுள்ள கிராமத்திற்குப் பாதயாத்திரைசெய்ய அணிவகுத்து நின்றனர். திருப்பராய்த்துறை தபோவனத்தைச் சேர்ந்த ஸ்ரீமத் சுவாமி குஹானந்தரும், ஸ்ரீமத் சுவாமி போதானந்தரும் உடன் வர ஓம்சக்தி ஓம்சக்தி ஓம்சக்தி ஓம், ஆதிசக்தி மஹாசக்தி பராசக்தி ஓம் என்னும் நாமத்தைச் சொல்லிக்கொண்டு நடந்து சென்றனர். நாமத்தை உணர்ச்சியுடன், ஒன்று சேர்ந்து சொல்லிக்கொண்டே நடந்ததனால், வெயிலோ தொலைவோ தெரியவில்லை. கிராம எல்லையை எட்டிவிட்டதைக் கிராமமக்கள் திரளாக நின்று காத்திருந்ததைப் பார்த்து அறிந்துகொண்டார்கள். கிராமமக்கள் மேள வாத்தியம் கோஷிக்கப் பூரண கும்பத்துடன் பாத பூஜை செய்து ஊருக்குள்ளே இருக்கும் சௌடேஸ்வரி அம்மன் கோவிலுக்கு அழைத்துச் சென்றார்கள். அங்குப் பஜனை, ஆரதி விமரிசையாக நடந்தன. முகாம் தயார்செய்துவந்த புளியோதரை, பொங்கல் நைவேத்தியம் படைத்து ஊர்மக்களுக்குப் பிரசாதமாக வழங்கப்பட்டது. சிறுமியர் இத்தகைய வரவேற்பு தெய்விகம் வாய்ந்தது என்று அறிந்தனர்.

பின் கிராமத் துப்புரவுக்குச் சென்றார்கள். ஆனால் வீடுகள் முன்புறம் சாணம் போட்டு மெழுகிக் கோலமிட்டுச் சுத்தமாகக் காணப்பட்டன. ஒரு சாவடியை மட்டும் மாணவியர் சுத்தம் செய்தனர். பின்பு எடுத்துச் சென்ற சிற்

றுண்டியைச் சாப்பிட்டார்கள். ஊர் மக்கள் முகாமினருக்குப் பழச்சாறு தயார்செய்து வழங்கினர். பள்ளிக்கூடத்தில் ஊர் மக்கள் ஒருங்கே கூடினர். சக்தி வழிபாட்டின் அவசியத்தை விளக்கி அறிவுரை வழங்கப்பட்டது. முகாம் எடுத்துச் சென்ற சிம்மவாஹினி தேவியின் படம், ஊதுபத்தி ஸ்டாண்ட், குங்குமத்துடன் சிமிழ், திருநீறு டப்பா இவை பிரித்து ஐம்பத்தைந்து வீடுகளுக்கு வழங்கப்பட்டன. ஒவ்வொரு வீட்டிலும் மாணவியருடன் யதீசுவரிகள், சுவாமிகள் சென்று ஆணிஅடித்துப் படம் மாட்டிப் பொட்டு வைத்து ஊதுபத்தி ஏற்றி வைத்து, ''ஓம்சக்தி ஓம்சக்தி ஓம்சக்தி''என்று மூன்றுதடவை சொல்லி விழுந்து கும்பிடவேண்டும், தினமும் காலையில் சுத்தமாக இந்த வழிபாடு செய்த பின் தொழிலுக்குப் போகவேண்டும் என வீட்டுத் தலைவருக்கும் தலைவிக்கும் கற்றுக் கொடுத்தனர். பல குடும்பத்தினர் இந்த வாய்ப்பைக் கடவுளே நேரில் வந்து கண் திறந்து வைத்தது போன்று மகிழ்ந்து பரவசமடைந்தார்கள். ஐம்பத்தைந்து வீடுகளுக்குச் சென்று வழிபாட்டுக்குப் படம் மாட்டி வழிபாட்டுமுறை கற்பிக்கப்பட்டசெயல் கிராம மக்களுக்குப் புத்துயிர் வந்ததுபோலக் காணப்பட்டது. கிராம மக்கள் கூட்டத்திற்கு முகாம் மாணவியர் கலா நிகழ்ச்சிகள் நடத்திக் காட்டினார்கள். “இந்தியா குடிசையில் வாழ்கிறது”, ''சாம்ராட் அசோகன்'' மற்றும் பரதநாட்டியங்கள் நடத்தி மகிழ்வித்தார்கள். கிராமத்தின் முன்னணியிலிருப்போர் சிலர், இந்நாளைக் குறித்து நன்றி உணர்வுடன் போற்றி உரையாற்றினார்கள். பின்பு பிற்பகல் ஒரு மணிக்கு முகாமிற்குத்திரும்பினார்கள். பிற்பகல் நிகழ்ச்சி, திட்டப்படி நடந்தது. இரவு பத்து மணிக்கு அனைவரும் துயின்றார்கள்.

*6—5—83*அன்று காலைக் கடன்களை முடித்து அவரவர் குழுக்கள் அணிவகுத்து நின்று பஜனை செய்து கொண்டு தங்கும் விடுதியை வலம் வந்தார்கள். பின்பு பிரார்த்தனைக் கூடத்தில் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர், ஸ்ரீ சாரதா தேவியார், சுவாமி விவேகானந்தர் ஆகிய மூவரின் படம் வைத்துத் தீபம் ஏற்றி, பக்திப் பாடல்கள், கீதை பாராயணம், தினசரி தியானம் வாசிப்பு, காயத்ரீ ஜபம், தியானம் முதலியன நடைபெற்றன. அடுத்த நிகழ்ச்சி யோகாசனப் பயிற்சி. R.S.S. பெண்கள் ஸமிதியினர் பயிற்சி கொடுத்தனர். சூரிய நமஸ்காரம் மற்றும் ஆறு ஆசனங்கள் பழகினர். கட்டடத் துப்புரவு, நிகழ்ச்சிகள் எழுதுதல், பிரார்த்தனை நடத்தல், ஆரதி செய்தல், உணவுக் கூடத்தில் நாம ஜபம், பரிமாறுதல், குழு தங்கும் இடம் சுத்தம் செய்தல், தங்கள் உடல், உடை, உடைமைகளைச் சுத்தம் செய்தல், மணி அடித்தல், அமைதி காத்தல் இங்ஙனம் குழுக்களுக்கு வேலைப் பொறுப்புக் கொடுத்து அதைச் சரியாகச் செய்கிறார்களா என்பதைக் கவனித்து மதிப்பு எண்கள் கொடுக்கப்பட்டன. காலைச் சிற்றுண்டிக்குப் பின் மௌன வாசிப்பு நிகழ்ந்தது. *8-30* மணிக்கு முகாம் முகப்பில் சக்தி சங்கத்தின் கொடியேற்றப்பட்டது. பின் முகாம் தலைவி அன்றைய சிந்தனைக்குரிய விஷயமான நாட்டுப்பணியைப் பற்றிச் சில கருத்துக்களை மாணவிகளின் சிந்தனையைத் தூண்டுவதற்குக் கூறினார். பின்பு ஓர் இடத்தில் அணியாக ஐந்து குழுக்களும் அமர்ந்தனர். திருப்பராய்த்துறை தபோவனத்தைச் சேர்ந்த ஸ்ரீமத் சுவாமி திவ்யானந்தர் காலை, மாலை நிகழ்ச்சிகளில் ஒரு மணி நேரம் மாணவிகளுக்குச் சொற்பொழிவு ஆற்றினார். மாணவிகளின் கவன சக்தி, ஏற்றுக் கொண்ட விஷயத்தைத் திருத்தமாக எழுதும் பயிற்சி இவற்றில் அவர்களின் தேர்ச்சி அளவிடப்பட்டது. அவர்களுக்கு அறிவுரையின் இறுதியில் (Short Answer Test) தேர்வு நடத்தப்பட்டு மதிப்பு எண்கள் கொடுக்கப்பட்டன. பக்திப்பாடல்கள், நாட்டுப்பாடல்கள், கீதை இவைகளைக் கற்றுக் கொண்டார்கள். *12-30* மணிக்கு உணவு எடுத்துக்கொண்டு ஓய்வுக்குச் சென்றனர்.

*2-30* மணிக்குப் பிற்பகல் நிகழ்ச்சி ஆரம்பமாயிற்று. முதலில் உள்விளையாட்டு. பின்பு மன வெளிப்பாடு. இந்த நிகழ்ச்சியில் சுப்பிரமணிய பாரதியார் பாடல் “ஓம்சக்தி ஓம்சக்தி ஓம்சக்தி ஓம், பராசக்தி ஓம்சக்தி ஓம்சக்தி ஓம், கணபதி ராயன்...” என்னும் பாடலில் ஐந்து குழுக்களும் அவரவருக்குப் பிடித்த ஓர் அடியைத் தேர்ந்

தெடுத்து அந்த மூர்த்தியின் படத்தை ஓவிய மாகத் திட்டிக் கீழே ஒரு துதி ஐந்து வாசகத் திற்குள் மூர்த்தியின் தத்துவ விளக்கம் தர வேண்டும். மூன்று குழுக்கள் முருகனைத் தேர்ந் தெடுத்தார்கள்; ஒரு குழு கணபதி, ஒரு குழு கண்ணன் இவர்களைத் தெரிவித்தனர். இந்தப் பணியை மாணவிகள் ஊக்கத்துடனும் மகிழ் வுடனும் செய்தார்கள்.

வெளி விளையாட்டில் பந்து பாஸ் செய்தலி லும் இதர விளையாட்டுகளிலும் பேரார்வம் கொண்டு விளையாடினார்கள். மாலைச் சிற்றுண் டிக்குப்பின் அன்றாட நாட்குறிப்பை ஒவ்வொரு மாணவியும் எழுதிக் குழாம் தலைவியிடம் கொடுத்துத் திருத்தி வாங்கவேண்டும். மாலைப் பிரார்த்தனையில், பக்திப் பாடல்கள், பஜனை, தேவாரம், திருவாசகம், மூவர்கள் துதி எல் லாம் தொகுத்து அச்சிட்டு மாணவிகளுக்குக் கொடுக்கப்பட்டன. இதனால் எல்லாரும் கூட்டு வழிபாட்டில் ஒருங்கே பாட முடிந்தது. ஆரதி, ராமகிருஷ்ணர் துதி, தியானம், அருளுரை, காயத்ரீ முதலியன மாலைப் பிரார்த்தனையில் இடம் பெற்றிருந்தன. மாணவியர் பூஜை, ஆரதி செய்தார்கள். இரவு உணவுக்குப் பின் ஒரு மணி நேரம் கலா நிகழ்ச்சிகள். ஐந்து குழுவினர் ஐந்து நிகழ்ச்சிகளை நடத்தினர். பின்பு தூங்கச் சென்றார்கள். மேற்படி ஒவ் வொரு நிகழ்ச்சியிலும் குழுக்களின் கவனம், பொறுப்புணர்ச்சி, ஆற்றல் இவற்றைக் கணக் கெடுத்துச் சிறப்புக் குழுவினருக்குப் பரிசு தர ஏற்பாடு செய்யப்பட்டது.

இது போன்று 7-5-83 அன்று ஸ்ரீமத் சுவாமி அசலானந்தர் கொடியேற்றியபின் "தெய்வப் பணி" என்ற தலைப்பைக் கொடுத்து அன்றைய நிகழ்ச்சி முற்பகல் முழுதும் நடந்தது. மாலைச் சொற்பொழிவுக்குப் பின் முகாம் நிறைவு விழா நடந்தது. பரிசு வழங்கல் முடிந்த பின் குறித்த நேரத்தில் அவரவர் இடங்களில் அமர்ந்தார் கள். மாணவியர் "ஓம் சக்தி ஓம் சக்தி ஓம்" என் னும் நாமத்தை இடையறாது கூறிக்கொண்டிருந் தனர். மேடை ஒன்றின்மீது தீபத்துடன் மூவர் படங்கள், சுவாமி அசலானந்தர், யதீசுவரி அம்பிகாபிரியா, யதீசுவரி விஷ்ணுபிரியா, சக்தி சங்கத்தின் தலைவி, திருமதி மீனாக்ஷி தியாகராஜன், சங்கத் தாய்மார்கள் சிலர் ஒருங்கே இருக்கப் பெயர் குறித்த மாணவிகள் மட்டும் எழுந்து மேடைக்கு வந்தார்கள். சங்கத் தாய்மார்கள் வரிசையாக அவர்களுக்குத் திலக மிட்டு, சந்தனம், பூவைத்து ஆசிகளுடன் அனுப்ப மாணவிகள் மூவர் படங்களின் முன் விழுந்து கும்பிட்ட பின், ஆத்மீகப் பயிற்சி முகாமின் நற் சான்று இதழ், கீதைப் பேருரைப் புத்தகம், இவற்றை முறையே சுவாமிகள், யதீசுவரிகள் வழங்க அவற்றை அவையடக்கத்துடன் பெற்று மீண்டனர். அங்குக் கூடியிருந்த மக்கள் அனைவ ரும் நாமம் கேட்கும் இன்பத்தில் தங்களை மறந்து அமர்ந்திருந்தனர். 67 மாணவிகளும் இங்ஙனம் நற்சான்று இதழ் பெறும்வரை அமைதியாக இந்த நிகழ்ச்சி நடந்தது.

நகரப் பெரியார்கள் சிலர் முகாம் பயிற்சி பற்றித் தம் அபிப்பிராயங்களைத் தெரிவித்துப் பேசினார்கள். சுவாமிகளும், தலைமை தாங்கிய யதீசுவரிஅவர்களும் நிறைவு உரைநிகழ்த்தினார் கள். சங்கத் தலைவி நன்றி உணர்வுடன் நன்றி உரை வழங்கினார்கள். மங்கள ஆரதியுடன் விழா நிறைவு பெற்று மாணவியரும், முகாம் நடாத்தியவரும் பிரிந்து சென்றனர். ஆத்மீகப் பயிற்சி நிகழ்ச்சிகள் அனைத்தும் இளம் உள் ளங்களுக்கு மகிழ்ச்சியுடன் மனப்பண்பை உயர்த்துவதாகவும் உற்சாகம் ஊட்டுவதாக வும், கேட்டல், சிந்தித்தல், தெளிதல் என் னும் முறையிலும் அமைந்திருந்தன. மேலும் அவர்கள் உள்ளக்கிடக்கையில் உள்ள பல் வேறு ஆற்றல்களை வெளிப்படுத்தும் வகை யிலும், காலத்தைப் பயன்படுத்தும் முறை யிலும், பலதரப்பட்ட நிகழ்ச்சிகளாக அமைந் திருந்தன. வாழ்க சக்தி சங்கத் தாய்மார்கள்! வாழ்க சமூகத்தொண்டு! பாரதப் பெண்குலம் வாழ்க!

இது போன்று பல ஊர்களிலுள்ள தாய்மார் கள் சங்கங்கள், பயிற்சி முகாம்கள் நடாத்த முன்வருவார்களானால் நாட்டுப் பண்பும், கலாச் சாரமும், பக்தி நிறைந்த உள்ளங்களும், சமு கத்தில் முறையாக மேன்மையுற்று வளர்ந்து வரப் பேருதவியாக இருக்கும். மேலும் தாய்மார்கள் இந்த முகாமில் கலந்து கொண்டு நடைமுறையைப் பார்த்தும், பங் கெடுத்தும், பணியாற்றியும் பயன் பெறுவார் களாக.

**பொதுமக்களின் நித்திய வழிபாடு**

ஆண்டவன் முன்னிலையில் அனைத்துயிர்களும் சமம். அனைத்துயிர்களின் தோற்றங்களும் ஆண்டவனின் வெவ்வேறு தோற்றங்களாகின்றன. அனைத்துயிர்களிடத்தும் ஆண்டவனைக் காண்பதற்கு ஆலய வழிபாடு ஆரம்பநிலை ஆகிறது. கோயில் இல்லா ஊரில் குடி இருக்கவேண்டாம் என்பது அருள்வாக்கு. ஒவ்வோர் ஊரிலும் கல்விக்கூடம் அமைந்திருப்பது எவ்வளவு அவசியமோ, அவ்வளவு அவசியம் கோயில் அமைந்திருப்பதுமாகும். கல்விக்கூடத்தில் சிறுவர்கள் மட்டும் பயிற்சி பெறுகின்றனர். ஆலயத்தில் சிறியவர்கள், பெரியவர்கள் அனைவரும் பயிற்சி பெறுகின்றனர். எனவே ஓர் ஊரில் கல்விக்கூடமும், ஆலயமும் அவசியம் அமைந்திருக்கவேண்டும்.

வடஆற்காடு மாவட்டத்தில் மதினுப்பள்ளி என்னும் கிராமம் உள்ளது. அவ்வூர் மக்கள் சிரத்தையோடு பக்தியிலும் வழிபாட்டிலும் ஈடுபட்டு வருகின்றனர். ஆண்டுதோறும் மே மாதம் அவ்வூர் மக்கள் அனைவரும் ஒரு நாள் ஒன்று கூடி ஒரு விழா நடத்துகின்றனர். மாலையில் ஒரு பொதுக்கூட்டம் நிகழும். அக்கூட்டத்தில் பஜனையும், சன்மார்க்கச் சொற்பொழிவும் நிகழும். அதன் பிறகு, உயர்ந்தவர், தாழ்ந்தவர் என்னும் வித்தியாசம் பாராட்டாது அவ்வூர் மக்களும், பக்கத்து ஊர்களிலுள்ள ஹரிஜனங்களும் சேர்ந்து சுமார் இரண்டாயிரம் பேர் சமபந்தி போஜனம் செய்வார்கள். அனைவரும் கட்டுப்பாட்டுடன் ஒழுங்குமுறை தவறாது அமர்வார்கள். உணவு பரிமாறி முடியும் வரையில் நாம பஜனை செய்வார்கள். பரிமாறி முடிந்ததும் அனைத்தும் பிரம்ம சொரூபம் என்பதை ஞாபகமூட்டும் கீதையின் சுலோகம் ஒன்றைக் (அத்.4: சு.24) கூறிய பின் உணவருந்துவார்கள். உணவருந்தும் பொழுது அமைதியே வடிவெடுத்தவர்களாக இருப்பார்கள். சாப்பிட்டு முடிந்ததும் ஒவ்வொரு வரிசையாக எழுந்து ஒருவர் பின் ஒருவராகச் சென்று கைகளைக் கழுவிக்கொண்டு கலைந்து செல்லும் காட்சி உள்ளத்துக்கு அமைதியை ஊட்டுவதாக அமையும். இவ்வாண்டும் மே மாதம் 23ஆம் தேதி இந்நிகழ்ச்சி அவ்வூரில் சிறப்பாக நடந்தது.

அவ்வூர் மக்களுக்குத் தங்கள் ஊரில் ஆலயம் இல்லையே என்ற ஒரு குறை நீண்ட நாட்களாக இருந்து வந்தது. இவ்வாண்டு அக்குறையைப் போக்கிக்கொள்வதற்குக் கணபதி ஆலயம் ஒன்றை எழுப்பி ஆங்கு விநாயகப் பெருமானைப் பிரதிஷ்டை செய்து 23—5—83 அன்று கும்பாபிஷேகம் சிறப்பாகச் செய்து முடித்தார்கள்.

கும்பாபிஷேக விழாவின் பொழுது ஆண்களும், பெண்களும் உற்சாகத்துடன் வழிபாட்டில் ஈடுபட்டார்கள். 24—5—83 அன்று இரவு முழுவதும் "ஜெய் கணேச, ஜெய் கணேச, ஜெய் கணேச பா ஹி மா ம்; ஸ்ரீ கணேச, ஸ்ரீ கணேச, ஸ்ரீ கணேச ரக்ஷமாம்" என்னும் நாமத்தை ஆண்களும் பெண்களும் அகண்ட நாம பஜனையாகச் செய்தார்கள்.

25—5—83 காலை ஐந்து மணிமுதல் "ஓம் கணேசாய ஸ்வாஹா" என்று ஒவ்வொருவரும் உச்சரித்து அருகம் புல்லை நெய்யில் தோய்த்து ஓமகுண்டத்தில் சொரிந்து வைதிக முறைப்படி பக்திபூர்வமாக யக்ஞம் செய்தார்கள். மந்திரம் உச்சரிப்பது வெறும் சடங்காக நிகழாது பக்தியுணர்வுடன் யாவரும் உச்சரித்து யக்ஞத்தில் கலந்துகொண்டார்கள். காலை ஆறு மணிக்குமேல் விநாயகப்பெருமானுக்குக் குட முழுக்கு நிகழ்ச்சியும் பக்திபூர்வமாக நிகழ்ந்தது. அன்று ஆயிரக்கணக்கில் மக்கள் குடமுழுக்கு விழாவில் கலந்துகொண்டு புனித உணர்வு பெற்றார்கள்.

அன்றுமுதல், முறையாக வழிபாடு செய்து வருகின்றனர். ஜூலை மாதம் ஒன்பதாம் தேதி மண்டலாபிஷேகமும் செய்து முடித்தார்கள்.

ஆங்கு எழுந்தருளியுள்ள செல்வ விநாயகருக்கு நித்திய பூஜையை முறையாக அவ்வூர் மக்கள் செய்து வருகின்றார்கள். ஒரு நாளைக்கு ஒரு குடும்பத்தினர் செல்வ விநாயகருக்குப் பூஜை செய்யும் பொறுப்பை ஏற்றுக்கொண்டுள்ளனர். பூஜை செய்யும் நாளன்று அதிகாலையில் எழுந்திருந்து அக்குடும்பத்திலுள்ள சிறியவர்களும், பெரியவர்களும் கோயில் முழுவதையும் பெருக்கித் துப்புரவு செய்கின்றனர். விநாயகப் பெருமானுக்கு அபிஷேகம் செய்கின்றனர். அருகம்புல், மலர் முதலியவைகளைக்கொண்டு மாலை கட்டி இறைவனுக்குச்

சாத்துகின்றனர். பிறகு விநாயகர் சந்நிதியில் அமர்ந்து பஜனை பாடுகின்றனர். மற்றவர்களும் அதில் கலந்துகொள்கின்றனர். மாலையில் நைவேத்தியம் வைத்துப் பூஜை செய்கின்றனர். நைவேத்தியத்தைப் பிரசாதமாக வழிபாட்டில் கலந்துகொள்ளும் அனைவருக்கும் வழங்குகின்றனர். ஆண்டு முழுவதும் முறைவைத்துக்கொண்டு விநாயகப்பெருமானுக்கு நித்திய பூஜை நிகழ்த்தத் திட்டம் போட்டுச் செயல்பட்டு வருகின்றனர். தாய்மார்கள் இதில் ஆர்வத்துடனும் சிரத்தையுடனும் ஈடுபட்டு வருகின்றார்கள்.

கோயில் பொதுவுடைமை என்பதை அவர்கள் நிரூபித்து வருகின்றனர். ஒவ்வொருவருக்கும் கோயில் தங்களுடையது என்னும் உணர்ச்சி ஓங்கி வருகிறது. பூஜையை யாரோ செய்கிறார் என்று நினைக்காமல் நாமே செய்கின்றோம் என்னும் பொறுப்புணர்வு அவர்களிடம் மிகுந்து வருகிறது. கோயிலுக்குப் பூஜைக்காக நிதி ஒன்றும் இல்லாமலே நித்திய பூஜை வெகு சிறப்பாக நிகழ்ந்து வருகிறது. உள்ளும் புறமும் தூய்மை உடையவர்கள் ஆலயத்துள் சென்று பக்திபூர்வமாகப் பூஜை செய்யலாம் என்னும் முறை ஆங்குச் செயல்பட்டு வருகின்றது. இத்தகைய பூஜாமுறையின் மூலமாக ஊர்மக்களுக்கிடையில் ஐக்கிய உணர்வும், சமரச மனப்பான்மையும் வளர்ந்து வருகின்றன. பொதுமக்கள் பொறுப்பேற்று ஊரிலுள்ள ஆலயத்தில் நித்தியபூஜை செய்யும் புதிய புனிதமான முறையொன்று ஆங்குச் செயல்பட்டு வருகின்றது. மக்களிடையே உள்ள வேற்றுமை உணர்வும், நாத்திக மனப்பான்மையும் அகல்வதற்கு ஊர்தோறும் இத்தகைய நித்திய வழிபாட்டு முறை செயல்பட்டு வருவது நல்லது. இன்று மக்களிடையே அறிவு வளர்ந்திருக்கின்றவளவு உணர்வு திருந்தியமையவில்லை. மக்களுடைய மனதின் உணர்வைத் திருத்தியமைப்பதற்குக் கடவுள் வழிபாடு தான் சிறந்த முறை ஆகும். கடவுள் வழிபாட்டில் புகுந்துள்ள கசடுகளைக் களைந்துவிட்டால் அது மனிதனின் உள்ள உணர்வை திருத்தியமைக்க நன்கு பயன்படும். மனதிலுள்ள கசடுகளைக் களைவதற்கும் பொதுமக்கள் யாவரும் வழிபாட்டில் பொறுப்புடன் கலந்து கொள்வதற்கும் மதினுப்பள்ளியில் ஆரம்பித்து நடைபெற்று வரும் வழிபாட்டு முறை ஒவ்வோர் ஊரிலும் அமுலுக்குக் கொண்டு வரப்பட வேண்டும். மக்கள் இவ்வழிபாட்டு முறையில் ஊக்கம் காட்டுவார்களானால் இன்றைய பிரச்னைகளுக்கு விமோசனம் கிடைக்கும். நாட்டில் நிலவிவரும் ஜாதிப்பூசல்களும், மதச் சழக்குகளும், கீழான உணர்வுகளும் அகன்று மக்களிடையே தெய்விகம் குடிகொள்ள இவ்வழிபாட்டுமுறை ஒவ்வோர் ஊரிலும் நடைமுறைக்கு வருவதாகுக.

---

## செய்திகள்

**நிகழ்ந்தவை**

இவ்வாண்டு திருப்பராய்த்துறை ஸ்ரீ விவேகானந்த வித்யாவனக் குருகுல ஒன்பது, பத்தாவது வகுப்பு மாணவர்கள் ஐக்கிய வணக்கத்துக்காக ஜூலை 15, 16 தேதிகளில் மதுரை மீனாட்சி அம்மன் கோவிலுக்குச் சென்று வந்தார்கள். எட்டாம் வகுப்பு மாணவர்கள் கர்நாடக மாநிலத்தில் உள்ள மாதேஸ்வரன் மலைக்குச் சென்று வந்தார்கள். ஏழாம் வகுப்பு மாணவர்கள் கும்பகோணத்திலுள்ள கோயில்களுக்கும், ஐந்தாம், ஆறும் வகுப்பு மாணவர்கள் திருப்பெருந்துறைக்கும், இவ்வாண்டு குருகுலத்தில் சேர்ந்த புதிய மாணவர்கள் திருச்சியிலுள்ள கோயில்களுக்கும் வழிபாட்டுக்குச் சென்று வந்தார்கள்.

**நிகழ்பவை**

ஜூலை மாதம் 17-ஆம் தேதி ஞாயிற்றுக்கிழமை அன்று விருதுநகரிலுள்ள பெரிய காளியம்மன் கோவிலில் காலை 10-00 மணிமுதல் மாலை 4-15 மணி வரையில் ஸ்ரீமத் நித்தியானந்த சுவாமிகள் ஒரு நாள் அந்தர்யோகம் நடாத்துவார்கள்.

ஸ்ரீ விவேகானந்த வித்யாவனக் குருகுல மாணவர்கள் ஆடி. விடுமுறைக்காக ஆகஸ்டு மாதம் 8 ஆம் தேதி திங்கட்கிழமை மாலை 3 மணிக்கு மேல் அவரவர்கள் ஊருக்குப் புறப்படுவார்கள்.

ஆகஸ்டு மாதம் 14ஆம் தேதி ஞாயிற்றுக்கிழமை அன்று ராமநாதபுரம் ஜில்லா ராஜபாளையத்தில் உள்ள ஸ்ரீ பாரதி கல்யாண மண்டபத்தில் ஸ்ரீமத் நித்தியானந்த சுவாமிகள் ஒரு நாள் அந்தர்யோகம் நடாத்துவார்கள்.

---

# ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்

## இயற்றிய நூல்கள்

| | | |
|---|---|---|
| திருவாசகம் | பிரசார விலை | ரூ. 23-00 |
| ஸ்ரீமத் பகவத்கீதை 14-ம் பதிப்பு | ,, | ... 18-00 |
| மஹாபாரதம் | ,, | ... 7-00 |
| இராமாயணம் | ,, | ... 5-00 |
| ஸ்ரீ தாயுமானசுவாமி பாடல்கள் | ,, | ... 6-00 |
| ஸ்ரீராமகிருஷ்ணர் உபதேச மஞ்ஜரி | ,, | ... 5-50 |
| தினசரி தியானம் | ,, | ... 4-00 |
| ராஜயோக விளக்கம் | | ... 12-00 |
| கர்மயோக விளக்கம் | | ... 10-00 |
| பக்தியோக விளக்கம் | | ... 9-00 |
| ஞானயோக விளக்கம் | | ... 8-00 |
| பரமஹம்சரின் பெருமை | | ... 6-00 |
| ஸ்ரீ விவேகானந்தர் ஜீவிதம் | | ... 6-00 |
| கடவுளின் வடிவங்கள் | | ... 6-00 |
| சந்தேகம் தெளிதல் பாகம்—1 | | ... 5-50 |
| சந்தேகம் தெளிதல் பாகம்—2 | | ... 5-50 |
| விவேகானந்த விவரணம் | | ... 4-00 |
| ஸ்ரீ ராமகிருஷ்ண சரிதம் | | ... 3-50 |
| ஸ்ரீ சாரதாதேவியார் சரிதம் | | ... 3-00 |
| அனுஷ்டான வேதாந்தம் | | ... 3-00 |
| எதிர்கால இந்தியா | | ... 3-00 |
| திருக்கயிலாயகிரி யாத்திரை | | ... 3-00 |
| பஜனைப்பாடல்கள் | | ... 3-00 |
| தேவரகசியம் (முதலிய கதைகள்) | | ... 2-50 |
| தாயுமானவர் இயற்றிய | | |
| கருணாகரக் கடவுள் | விரிவுரை | ... 3-50 |
| பரிபூரணானந்தம் | டி | ... 3-00 |
| சின்மயானந்த குரு | டி | ... 3-00 |
| ஆனந்தமானபரம் | டி | ... 3-00 |
| சுகவாரி | டி | ... 3-00 |
| மௌனகுரு வணக்கம் | டி | ... 3-00 |
| எங்கும்நிறைகின்றபொருள் | டி | ... 2-50 |
| மலைவளர் காதலி | டி | ... 1-50 |
| பரசிவ வணக்கம் | டி | ... 1-00 |
| கண்ணன் என்னும் கடவுள் | | ... 2-50 |
| ஹரிச்சந்திரன் | (நாடகம்) | ... 2-00 |
| பாதுகாபட்டாபிஷேகம் | டி | ... 1-75 |
| விரதவீரர் பீஷ்மர் | டி | ... 1-50 |
| விபீஷணன் சரணாகதி | டி | ... 1-50 |
| பரமஹம்சர் பாமாலை | | ... 1-50 |
| காயத்ரீ | | ... 1-50 |
| நன்மக்களைப் பெறுதல் | | ... 1-50 |
| அமரநாத யாத்திரை | | ... 1-25 |
| மாணாக்கன் | | ... 1-25 |
| செத்தவர்கள் நம்மோடு பேசுகிறார்களா? | | ... 1-25 |
| சைவன் யார்? | | ..., 1-25 |
| இறைவணக்கம் | | ... 1 00 |
| குழந்தைகளின் களிக்கூடம் | | ... 1 00 |
| இராவண தத்துவம் | | ... 1-00 |
| வாலி மோட்சம் | (நாடகம்) | ... 1-00 |
| தவப்புதல்வர்கள் | (நாடகம்) | ... 1-00 |

| | | |
|---|---|---|
| ஏகலைவ்யனின் குருபக்தி | (நாடகம்) | ... 1-00 |
| தானவீரன் கர்ணன் | (நாடகம்) | ... 1-00 |
| மார்க்கண்டேயன் | (நாடகம்) | ... 1-00 |
| பிரஹ்லாதன் | (நாடகம்) | ... 1-00 |
| தபோபலன் | (நாடகம்) | ... 1-00 |
| பார்வதி,லக்ஷ்மி,சரஸ்வதி கர்வபங்கம் | | ... 1-00 |
| இந்துமதமும் கிறிஸ்துவமதமும் | | ... 1-00 |
| நோய்க்கு இடம் கொடேல் | | ... 1-00 |
| *ஆத்ம சக்தி | | ... 1-00 |
| *சக்தி தத்துவம் | | ... 0 90 |
| *சூரியநாராயணன் | | ... 0-75 |
| தெய்வீக மகிமைகள் | | ... 0-75 |
| *ஆலய வழிபாடு | | ... 0-75 |
| *சிவதத்துவம் | | ... 0-70 |
| *மனிதனது நிஜசொருபம் | | ... 0-70 |
| தாயுமானவர் ஆலயத்தில் தத்துவ அமைப்பு | | ... 0-60 |
| நன்னெறிகளும் அருள்வாக்குகளும் | | ... 0-60 |
| *கணபதி | | ... 0-60 |
| *முருகக்கடவுள் | | ... 0-50 |
| விஷ்ணு தத்துவம் | | ... 0-50 |
| கர்மகாண்டம் எது? ஞானகாண்டம் எது? | | 0-50 |
| வர்ணாச்ரம தர்மம் | | ... 0-30 |
| அருள் விருந்து 1 to 25 ஒவ்வொன்றும் | | ... 0-30 |
| விவேகானந்தரின் வீர கர்ஜனை | | ... 0-30 |
| கந்தர் அநுபூதி | | ... 0 25 |
| The Bhagavad Gita ( 11th Imp. ) | | ...24-00 |
| Tirukkural | (with plastic cover) | ... 8-00 |
| The Indian National Education | | ... 8-00 |
| Ramakrishna lives Vedanda | | ... 8-00 |
| Mahaveer Sri Hanuman | | ... 7-75 |
| The Bhagavad Gita (Small Size) | | ... 6-00 |
| Man Making Message | | ... 7-00 |
| Ramayana | (with plastic cover) | ... 7-00 |
| Mahabharata | ,, | ... 6-00 |
| Daily Divine Digest (DELUXE) | | ... 6-00 |
| Daily Divine Digest (Ordinary) | | ... 4-00 |
| Sri Krishna-The Manifest Divinity | ,, | ... 6-00 |
| Facets of Brahman or The Hindu Gods | | ... 5-00 |
| Sri Vishnu Sahasranama Stotram | | ... 4-00 |
| Siva Sahasranama Stotram | | ... 3-50 |
| Bheeshma The Superman | | ... 3-50 |
| Hinduism Hosts Christianity | | ... 3-00 |
| *Introducing the Gita | | ... 2-00 |
| Holy Bible—In the Light of Vedanta | | ... 1-50 |
| Reminiscences of Master Mahashaya | | ... 1-50 |
| The Garland of Paraaparam | | ... 1-50 |
| *Key to Higher Life | | ... 1-25 |
| *The student | | ... 1-25 |
| The Teacher | | ... 1-00 |
| The School | | ... 1-00 |
| The Nursery School | | ... 1-00 |

## சேலம் ஸ்ரீ ஸாரதா கல்லூரியில்

# மூன்று நாட்கள் சிறப்பு வழிபாடு

### ஆகஸ்ட் மாதம் 4 வியாழன், 5 வெள்ளி, 6 சனி

சேலம் ஸ்ரீ ஸாரதா கல்லூரியில் ஆகஸ்ட் மீ 4, 5, 6, தேதிகளில் கீழ்க்கண்ட நிகழ்ச்சி முறைப்படி சிறப்பு வழிபாடு நடைபெறும். ஆகஸ்ட் 4ஆம் தேதி வியாழக்கிழமை 'ஓம் நமசிவாய' என்னும் மந்திரமும், 5ஆம் தேதிவெள்ளிக்கிழமை 'ஓம் மஹாசக்த்யை நம:' என்னும் மந்திரமும், 6ஆம் தேதி சனிக்கிழமை 'ஓம் நமோ நாராயணாய' என்னும் மந்திரமும் நாம அர்ச்சனையின் பொழுது ஜபத்துக்கு எடுத்துக்கொள்ளப்படும். இதில் அன்பர்களும், தாய்மார்களும் மூன்று நாட்களிலுமோ அல்லது வசதிப்படும் நாட்களிலோ கலந்துகொள்ளலாம். தங்குவதற்கு இடவசதி தனித்தனியே அமைக்கப்பெறும். தமக்குத் தேவையான படுக்கை வசதிகளை அவரவர்களே கொண்டு வரவேண்டும். உணவுக்காக நாள் ஒன்றுக்கு ரூபாய் எட்டு வீதம் நேரில் செலுத்தலாம்.

### நிகழ்ச்சி முறை

#### காலை

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 5-45 | மணி முதல் | 6-00 | மணி வரை | — | திருப்பள்ளி எழுச்சி |
| 6-00 | ,, | 7-00 | ,, | — | நாம அர்ச்சனை |
| 7-00 | ,, | 7-10 | ,, | — | தியானம் |
| 7-30 | ,, | | | — | சிற்றுண்டி |
| 9-00 | ,, | 10-00 | ,, | — | சத் சம்பாஷணை |
| 11-00 | ,, | 12-00 | ,, | — | நாம அர்ச்சனை |
| 12-00 | ,, | 12-10 | ,, | — | தியானம் |
| 12-30 | ,, | | ,, | — | நண்பகல் உணவு |

#### மாலை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 4-00 | மணி முதல் | 4-30 | மணி வரை | — | சிற்றுண்டி |
| 4-30 | ,, | 5-00 | ,, | — | பஜனை |
| 5-00 | ,, | 6-00 | ,, | — | நாம அர்ச்சனை |
| 6-00 | ,, | 6-10 | ,, | — | தியானம் |
| 6-30 | ,, | 7-30 | ,, | — | சொற்பொழிவுகள் |
| 7-30 | ,, | 8-00 | ,, | — | கலா நிகழ்ச்சி |
| 8-30 | ,, | | | — | இரவு உணவு |

இங்ஙனம்
சித்பவானந்த

Edited by SWAMI NITHYANANDA,
Printed & Published by Swami Sankarananda at Tapovanam Printing School, Tirupparaitturai, Tiruchi Dt.